

நிலத்தின் கீழ்பல் லுலோகங் களாயினை
    நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை

தலத்தின் மீது மலையு நதிகளுந்
    சாருங் காடுஞ் சுனைகளுமாயினை

குலத்தி லெண்ணற்ற பூண்டு பயிரினம்
    கூட்டி வைத்துப்பல நலந்துய்த்தினை

புலத்தை யிட்டிங் குயிர்கள் செய்தா யன்னே
    போற்றி போற்றி நினதருள் போற்றியே.

—பாரதியார்

# ஸப்தகிரி

அக்டோபர்-1991

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 | இதழ் 5

## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : காளிங்க மர்த்தனம்.

பின்னட்டை : சேஷ வாகனம.

-திருமலை பிரம்மோத்ஸவ நிகழ்ச்சிகள்.

முதல் உள்ளட்டையில் : திருமலையில் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள்

2-வது உள்ளட்டையில் : திருமலையில் ஆந்திர மாநில முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி அவர்கள்

சிறப்பாசிரியர் :
திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

JAGADISH

# உங்களுடன்...

"யாதேவி ஸர்வ பூதேஷு" "பரப்ரும்ம மஹிஷீ" "ச்ரத்தயா தேவோ தேவத்வ மச் னுதே" "உன் மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனாவலி" "அகிலாண்ட கோடியீன்ற அன்னையே" ஆகிய இவையாவும் இவ்வண்டத்தைப் படைத்து, இயக்கி, காத்து வரும் ஆதிசக்தியின் பெருமை கூறும் தொடர்களாகும். அது மட்டுமல்ல, பெண்மையின் பெருமை பேசும் கோஷங்களுமாகும். ஹொயங்கா நதி நாகரீகம் பேசும் சைனாவும், ஞைல் நதி நாகரீகம் பேசும் எகிப்தும், டைக்ரீஸ் நதி நாகரீகம் பேசும் மெஸபெடோமியாவும், தங் கள் மத வழிபாட்டு முறைகளில் பெண்தெய்வ வழிபாடு பற்றிப் பேச முற்பட்டாலும், சிந்துநதி நாகரீகம் பேசும் இம்மண் கண்ட இந்து சமயத்தில் பெண் தெய்வ வழிபாடும், பெருமையும் முக்கியத்துவம் பெற்றுத் தனியொரு சிறப்புடன் மிளிர்கின்றது.

ஆக்கல், அளித்தல், அழித்தல் நாயகர்களாக முப்பெரும் தெய்வங்களான பிரம்மனை யும், பரந்தாமனையும், பரமசிவனையும் இந்து மதம் வழிபட்டாலும், அம்மூர்த்திகளையும் இயக்கிடும் பெரும்சக்தியாக அவற்றிற்குத் துணையாகப் பெண்தெய்வங்களையும் சேர்த்த மைத்து மேலும் அச்சக்திகளை இணைத்து அதனை ஆதிசக்தியாக வழிபட்டுதன்னை உயர்த்திக் கொண்டது இந்து சமயம். அச்சக்தியை வழிபட்டதன் மூலம் பெண்மையின் - தாய்மையின் அருமை பெருமைகளை ஆண்மை அறியும் வண்ணம் உணரச் செய்து அன்பும் அறமும் உடைய ஒரு மக்கட் சமுதாயத்தை உருவாக்க வழிவகுக்கப்பட்டது.

பூமியை உடலாகவும், சூரியசந்திரர்களை கண்களாகவும், மலைகளை எலும்புகளாக வும், ஆறுகளை நரம்புகளாகவும், கடலை வயிறுகவும், காற்றினை மூச்சாகவும், நெருப்பினை வாயாகவும் வைத்து அவ் ஆதி சக்தியை வர்ணித்தது மூலம், அவ்இயற்கையே அச்சக்தி யாகும் என்று கூறாமல் கூறினர். ஒரு குழந்தையின் வளர்ப்பும், வளர்ச்சியும் ஒரு தாயால் கவனிக்கப்படுவது போல, இவ்வுலக உயிர்களின் தோற்றமும், வளர்ச்சியும் இச்சா, க்ரியா, ஞானசக்திகளின் இருப்பிடமான அவ் ஆதிசக்தியின் பின்னணியில் இயக்கப்படுகிறது. சித்திபுத்தியுடன் விநாயகரையும், வள்ளி தெய்வானையுடன் முருகனையும், சாயாவுடன் சூரியனையும், ஸ்ரீதேவிபூதேவியுடன் திருமாலையும், அம்பிகையுடன் சிவனையும் வணங்கப் பெறும் ஷண் மதங்களும் சக்தியின் சிறப்பினை விளக்குகின்றன. பிரம்மன் தன் சக்தியான கலைமகளை தன் நாவிலும், திருமால் தன் சக்தியான திருமகளை தன் மார்பிலும், சங்கரன் தன் சக்தியான மலைமகளை தன் மெய்யிலும் வைத்து வழிபடச்செய்ததின் மூலம் பெண் மைக்கு ஏற்றம் புரிந்திட்ட நமது இந்து சமயம், "குமாதா ந பவதி, குபுத்ரோ அஜாயதே" என்றவாறு கெட்டதாய் என்று எவரும் இல்லை. ஆனால், தீமைகள் குடிகொண்ட பிள்ளை கள் இருக்கலாம் என்று குறிப்பிட்டு தாய்மையின் பெருமை கூறி பெண்மையைப் போற்றியது. மண்ணையும், ஆறுகளையும், மலைகளையும், மொழியையும் பெண்மையில் அழைத்துப் பெருமை பெற்ற இந்து சமயம் பெண்களுக்கு எல்லா துறைகளிலும் வாய்ப்பளித்து உயர்வு பெற்றது என்பதற்கு கார்க்கி, மைத்ரேயி போன்ற வேதகாலத்துப் பெண்மணிகள் சில சாட்சிகளாகும். சாவித்ரி, நளாயினி, அநுசூயா போன்றவர்கள் பெண்டிரின் அன்பின் மற்றும் கற்பின் திறத்தைக் காட்டிடும் ஒரு சில உதாரண காரிகைகளாவர்.

இத்தகு மேன்மைமிகு பெண்களும், அத்தகுப்பெண்கள் நடமாடிடும் வகையில் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்திட்ட மேன்மக்களும் வாழ்ந்திட்ட இம்மண்ணின் மீது இன்று நடப்ப தென்ன? நாகரீகத்தின் உச்சாணிக்கொம்பில் இருந்திடும் சில மேலைநாடுகளிலேயே பெண் விடுதலை என்பது இரண்டு தலைமுறையினர்க்கு முன்புதான் ஏற்பட்ட நிகழ்ச்சியாக அமைந்திட்ட போது இப்பெண்ணுரிமை வேத காலத்திலேயே இம்மண்ணில் இருந்திட்ட போது, இன்று பல சமூக அமைப்புக்கள் பெண் விடுதலை பற்றிக்குரலெழுப்பக் காரண மென்ன? ஆண் வர்க்கத்தினரின் சுயநலங்களும், அரசியல் வாதிகளின் பதவி வெறிகளும்,

(48 ஆம் பக்கம் பார்க்க)

# செஞ்சொற் கவிகள்

திரு. கே.கே.ஏ. ரங்கராஜன் - திருப்பதி.

திருமகள் கொழுநனான ஸ்ரீமந் நாராயணன் ஸத்ய காமத்வன். அவன் கல்யாண குணங்கள் பல நிரம்பப்பெற்றவன். உலகோர்களின் நலனுக்காகத் தன்னை அழிய மாறி அருள்புரிபவன். ஸத்ய ஸங்கல்பனுமாவான். தன்னுடைய தானிட்ட வழக்கால் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்கிறன். தன் திருவவதாரங்களை வடநாட்டிலேயே பெரும்பாலும் முடித்துக்கொண்டதனால் அதிருப்தியடைந்து,

क्वचित् क्वचिन्महाभागाः
द्रमिडेषु च भूरिशः ।
ताम्रपर्णी नदी यत्र कृतमाला
पयस्विनी ॥

என்கிற ச்லோகத்திற்குத்தக்கவாறு தென்னாட்டில் தன்னுடைய அம்சங்களாக ஆழ்வார்களை அவதரிப்பிக்கச் செய்து அவர்களுக்கு மயர்வு என்னும் அஜ்ஞானத்தை இல்லை செய்து நல்லமதியினை அளித்து அவர்களுடைய திருவாக்கினால் கேட்டின்புற்றுன். இதனை நம்மாழ்வார் 'தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என்வாய் முதலப்பனை' என்னும் தொடரால் காட்டுகிறர். மேலும் 'செஞ்சொற்கவிகாள்' என்னும் பதிகத்தில் 'தன்னைத் தானே துதித்து' என்னும் தொடரால் உணர்த்துகிறர். அதாவது, லௌகிகமாயும் வைதிகமாயுமுள்ள எல்லாச் சப்தங்களுக்கும் எம்பெருமான் முதலானவன் ப்ரதானமானவன் - என்று அறிகையாலே அவன் துதி செய்வதற்கு மட்டும் பாடுபொருளாக இருந்தானில்லை. அவனே துதி செய்வதற்கும் காரணமானவன் என்பதாகும். 'குருகூர்ச் சடகோபன் சொல்' என்று நம்மாழ்வார் சொல்லியிருப்பினும் அவ்வண்ணம் சொல்லிவைத்ததும் அவனே (எம்பெருமான்) ஆயிற்று என்பதாம். அவருடைய அனுபவம் நம்மாழ்வாருக்குத் தேனாகவும் பாலாகவும் கன்னலாகவும் அமுதமாகவும் இருந்தது. தான் ரஸித்துப் பருகவேண்டிய அமுதம் தன்னை முற்றுமுண்டதாக ஆழ்வார் வியந்து பேசுகிறர். இவ்வாறு எம்பெருமானை நம்மாழ்வார் அநுபவிக்கக் காரணம் முதலாழ்வார்களே ஆவர். எவ்வாறெனின் 'செஞ்சொற்கவிகாள்' 'இன்கவிபாடும் பரம கவிகள்' 'பண்ணுர் பாடலின் கவிகள்' என்று நம்மாழ்வார் அவர்களையே மனத்திற்கொண்டு அவர்தம் திவ்வியப் பிரபந்தத்தை அருளிச் செய்துள்ளார்.



பொய்கையாழ்வார்

கவிகள் மூவகைப்படுவர். 'சிறப்புடன் பூனை இறப்பிலிருந்தால் புறப்படமாட்டாதெலி' என்று எதுகை மோனையோடு கவிபாடுமவர்களைக் 'கவிகள்' என்றும், எழுத்து, சொல், அடி, தொடை, யாப்பு என்னும் இலக்கணக்கூறுகளோடு சொற்களைப் பெய்து 'என்னைக்கொள்' 'என்னைக்கொள்' என்று சொற்கள் அவர்களுக்கு முந்தி நின்று பொருட்செறிவோடு கவிபாடுமவர்களைச் 'சொற் கவிகள்' என்றும், கைம்மாறு ஏதும் கருதாது பகவத் குணங்களையே எப்போதும் அநுபவித்துக் கவிபாடுமவர்களைச் 'செஞ்சொற் கவிகள்' என்றும் மூவகைப் படுவர்.

செஞ்சொல்லாவது நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப் பட்டிருத்தலே ஆகும். இவ்வாறு ஒருபடிப்பட்டிருந்த தன்மையை உடையவர்கள் முதலாழ்வார்கள். 'உண்ணுஞ் சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்னுமாபோலே திருவேங்கடவனையே பாடுபொருளாக முதலாழ்வார்

கள் கொண்டபோதிலும் திருவ வதாரங்களில் கண்ணனின் திரு விளையாடல்களை அநுபவித்து அவனுடைய ஸௌலப்பியத்தி லிருந்து மோஹித்தவர்கள்.

பொய்கையாழ்வார்,

'விரலோடு வாய்தோய்ந்த
வெண்ணெய் கண்டு ஆய்ச்சி
உரலோடுறப் பிணித்த ஞான்று-
குரலோவா
தேங்கி நினைந்தயலார் காண
இருந்திலையே
ஓங்கோத வண்ணு வுரை.'

என்னும் பாசுரத்தில் கண்ண னின் களவில் மோஹித்த வர லாற்றைக் காணலாம்.

கண்ணன் வெண்ணெய்க் களவு செய்து யசோதைப் பிராட்டியிடம் அகப்பட்டுக் கொண்டு தாம்பாலாப்புண்டு உலகோர்களின் கண்களுக்குப் புலப்பட்டுக் கொண்டிருக்கும் நிலையைப் பார்த்து பொய் கையாழ்வார் மோஹிக்கிறுர். அதாவது கண்ணன் வெண் ணெயைத் திருடி உண்ணும் போது அவனுடைய விரலி லும் வாயிலும் படிந்திருந்த வெண்ணெயை யசோதையா னவள் பார்த்து அவனைத் தண் டிக்க நினைத்து உரலோடுச் சேர்த்துச் சின்னஞ் சிறு துண்டுகளாக இருந்த கயிறு களை முடிபோட்டுக் கண்ணி யாக அமைத்த கயிற்ருல் கட்டி வைத்தாள். அதனால் உரக்க அழுகுரலையுடையவனாய் ஏங் கிக் கொண்டிருந்தான். அச்ச மயத்திலும் கண்ணன் வெண் ணெய்க் களவு பற்றியே சிந் தித்துக் கொண்டு பஞ்சலக்ஷம் குடிப் பெண்களும் வேடிக்கைப் பார்க்கும்படி இருந்த தெங் ஙனே! என்று அவனுடைய பரத்துவ குணத்தை எண்ணி அவன் இங்கு நீர்மைக் குணத் துடன் பொலிகின்ற நிலை மையைக் கண்டு மோஹிக்கிறுர். இவ்வாறு நம்மாழ்வார் 'பத்து டையடியவர்க் கெளியவன்' என் னும் பதிகத்தில் கண்ணனின் வெண்ணெய்க் களவினால் உர லில் பொருந்தியிருந்து ஏங் கிக் கொண்டிருந்த எளிமைக் குணம் எத்திறம்! எத்திறம்!! என்று மோஹிக்கிறுர். இங் ஙனே 'பிறந்தவாறும்' 'கண்கள் சிவந்து' என்னும் பதிகங்களி லும் மோஹித்து விழுகிறுர் நம் மாழ்வார்.

'...............கொண்டு
குடிமாடிக் கோவலனாய் மேவி
என்னெஞ்சம்
இடமாகக் கொண்ட இறை'

என்னும் இப்பாசுரத்தில் கண் ணனின் குடக்கூத்தைக் கண்டு களித்த பூதத்தாழ்வார் அவனு டைய (கண்ணன்) அலுப்புத் தீருவதற்குத் தம் நெஞ்சை இட மாக - ஓய்வு எடுத்துக் கொள் ளுமிடமாகக் கொண்ட அவ னுடைய எளிமைக் குணம் (ஸௌலப்யம்) என்னே! என வியக்கிறுர். பெரியாழ்வாரும்,

''குடங்க ளெடுத்தேற விட்டுக்
கூத்தாட வல்லவெங்கோவே'

என்று கண்ணனின் குடக் கூத்தைப் பற்றிப் பேசுகிறுர். இதற்கு 'ஏறிட்ட குடம் கண் டாலும் கூத்தின் வகைகளோ தான் காணலாயிருக்கிறது. பர தத்தளவு மிறே நருத்த (நாட் டியம்) விசேஷம் காணலாவது.



பூதத்தாழ்வார்

இவனுடைய வல்லபம் (வல் லமை) தெரியாது. நருத்தத் துக்கு ஒரு ராஜாவென்னு மித் தனையிறே' என்று பெரியவாச் சான் பிள்ளை வியாக்கியானம் இட்டருளிகிறுர். நம்மாழ்வாரும் கண்ணனின் குடக்கூத்தை அநு பவித்த விதம் திருவிருத்தத்தில் காணத்தக்கது.

'குடமாடி யிம்மண்ணும் விண்ணுங்
குலுங்க வுலகளந்து
நடமாடிய பெருமான்'

என்கிறுர். கண்ணனின் குடக் கூத்தாடுதலைக் கண்டு மண்ணுலகத்தவர்போல விண் ணுலகத்தவரும் கண்டு அவனு டைய ஸௌலப்ய குணத்தைப் பாராட்டி வியந்தனராம். கூத் தாடுதலினால் ஏற்பட்ட இளைப் புத் தோன்ருது விளையாட்டா கவே செய்தமை தோன்ற 'நட மாடிய' என்னுஞ் சொல் பெய் யப் பெற்றுள்ளதாக ஸ்ரீகாஞ்சி

ஸ்வாமி நயமாக எடுத்துரைப்பர்.

திருவாய்மொழியில் 'கோவிந்தன் குடக்கூத்தன் கோவலனென்றென்றே குனித்து' என்னுமிடத்தில் குடக் கூத்தால் அவனது இயற்கையான ஐச்வர்யமும் ஸௌலப்யமும் காணப்படுவதை வியாக்கியானச் சக்ரவர்த்தி எடுத்துக் காட்டுவர். 'கூத்தன் கோவலன்' என்பதற்கு "நடக்கப்புக்கால் வல்லாராடினாப் போலே இருக்கை. 'புத்ர. ப்ராதரி கச்சதி' வழித்துணையாய் அவன் முன்னே போக பின்னே போமிடத்து நடையழகு தானே ப்ரயோஜமாயிருக்கை. 'ஆடல் பாடலவை மாறினர்தாமே' என்னக் கடவதிறே. இவன் திருக்குழல் வாய் வைத்தபோது அப்ஸரஸ்ஸுக்கள் குழலோசையைக் கேட்டுப் பாட்டுத் தவிர்ந்தார்கள். இவன் நடை கண்டு ஆடல் தவிர்ந்தார்கள்" என்னும் வியாக்கியானத்திற்கிணங்க கண்ணனின் குடக்கூத்தை அநுபவித்து மோஹித்தார்கள் ஆழ்வார்கள்.

> 'அடைந்த தரவணை மேல்
> ஐவர்க்காய் அன்று
> மிடைந்தது பாரதவெம்போர்-
> உடைந்ததுவும்
> ஆய்ச்சிபால் மத்துக்கே அம்மனே
> வாளெயிற்றுப்
> பேய்ச்சி பாலுண்டபிரான்'

என்னும் பாசுரத்தில் கண்ணனின் பரத்வ குணத்தால சக்தியையும் ஸௌலப்ய குணத்தால் அசக்தியையும் வெளிக்காட்டும் தன்மையை நினைந்து பேயாழ்வார் மனம் குழைகிறார். அதாவது 'ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:' என்கிற படியே திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது திருக்கண் வளர்ந்தருளினான்; ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்து ஆச்ரதரான பஞ்சபாண்டவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து பாரதப்போர் நடத்தினன். இவ்வாறு அளவு கடந்த சக்தியுக்தனாகவும்,

> "உழந்தாள் நறுநெய்ஓரோ
> தடாவுண்ண
> இழந்தாள் எரி வினாலீர்த்து
> எழில் மத்தின்
> பழந்தாம் பாலோச்சப் பயத்தால்
> தவழ்ந்தான்
> ................"

என்பதற்கிணங்க யசோதைப் பிராட்டி மத்து கொண்டு அடிப்பதுபோல கைவோச்ச அப்போது அசக்தனைப் போல நடுநடுங்கி இருந்தான். நாட்டியக் கலையில் அபிநயம் செய்து காட்டுவது போல அபிநயிக்கும் பருவத்துக்கு முன்னமே முலையுண்கிற காரணங்கொண்டு பூதனையென்னும் பேய்ச்சியின் உயிரை உறிஞ்சி வற்றச் செய்தான். இவ்வண்ணம் சக்தியையும் அசக்தியையும் மாறிமாறி வெளியிடும் திறம் என்னே! என்று மனங் குழைகிறார்.



பேயாழ்வார்

இவ்வாறு முதலாழ்வார்கள் கண்ணனின் திருவிளையாடல்களில் மனத்தைப் பறிகொடுத்து மோஹித்ததை உணர்ந்து நம்மாழ்வார் தானும் மோஹிக்கிறார். எம்பெருமானின் குணங்களைப் பாலன்ன தமிழில் பேசிக் களித்தனர் முதலாழ்வார்கள். இதனால் 'பாலேய் தமிழர்' என்று நம்மாழ்வாரால் கொண்டாடப்பட்டனர். இன்பத் தமிழ்க் கவிதைகளால் எம்பெருமானைப் பாடித் தொழுதனர். அதனால் முதலாழ்வார்கள் 'இன்தமிழ்ப் பாடும் பரம கவிகள்' எனப்பட்டனர்.

முதலாழ்வார்கள் முறையே பரபக்தி, பரஜ்ஞானம், பரம பக்தி ஆகியவற்றிற்குக் காரண பூதராக இருந்தனர். எங்ஙனேயென்னில் பொய்கையாழ்வார் முதல்திருவந்தாதியில் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை நிர்ஹேதுகமான எம்பெருமானருளாலே தோன்றிய பரபக்தி தசையை அடைந்துள்ள ஜ்ஞான விசேஷத்தால் அநுபவித்து அத்திருமாலுக்குச் சேஷமானச் செல்வங்களை ஸ்வதந்த்ரமென்னும் அந்ய சேஷமென்னும் நினைக்கும் அஜ்ஞானவி

ருள் நீங்குமாறு பூமி முதலி யவற்றை அகலாக உருவகப்ப டுத்திக் காட்டி இரண்டு செல் வங்களையும் (நித்ய விபூதி, லீலா விபூதி) தனதேயாகவு டைய எம்பெருமான் சேஷி யென்றும் அவனுக்குச் சேஷமா யிருப்பதே ஆத்மாவின் இயல் பான குணம் என்றும் அப்பெரு மானின் திருவடிகளிற் செய்யும் கைங்கர்யமே பரம புருஷார்த்த மென்றும் அப்புருஷார்த்தத்தை அடைவிக்கும் உபாயமும் அத்தி ருவடிகளே என்றும் திட்டவட்ட மாக அறுதியிட்டுப் பேசினார். வேதாந்தவாசிரியரும்

'திருவிளக்காமெனும்
வையந்தகளி நூறுஞ்
செம்பொருளாவெனக்கருள்
செய்திருந்த நீயே'

என்கிறார்.

பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் எம்பெருமா னின் திருக்குணங்களைப் பொய் கையாழ்வாருடன் சேர்ந்து அநு பவித்ததன் பயனாய் அவனது இன்னருளாலே வந்த தமது பரபக்தி, பரஜ்ஞாந நிலையை யடையும்படி ஒருநிலைப்பட்டு வளர பரஜ்ஞான நிலையைய டைநத அந்த அன்பின் மிகுதி யால் எம்பெருமானின் தன்மை களை முழுவதும் அநுபவிக்கி றார்.

பேயாழ்வார் தம் முன்னவர் களுடன் கூடி எம்பெருமானின் கல்யாண குணங்களை அநு பவித்து அவன் இன்னருளால் பரமபக்தி தலையெடுதது ஓங் கப் பெற்று, கடலில் மூழ்கி யவன் ரத்னத்தை எடுத்தேன்; முத்தை எடுத்தேன்; மாணிக் கத்தை எடுத்தேன் என்றுமா போலே லக்ஷ்மியுடன் கூடிய நாராயணனைக் கண்டு,

திருக்கண்டேன் பொன்மேனி
கண்டேன் திகழும்
அருக்கனணி நிறமும் கண்டேன்-
செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்
புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று.

என்று தமக்குண்டான ஜ்ஞான விசாலத்தால் ஸ்வரூப, உபாய, புருஷார்த்தங்களுக்குரிய அர்த்தங்களையும் பலகால் பன் னியுரைக்கிறார்.

ஆக, திருமாலை உபயவி பூதி நாதன் என்று பொய்கை யாழ்வாரும், அவன் நாரா யணவாச்யனென்று பூதத்தாழ் வாரும், நாராயண சொல் லோடு ஸ்ரீமந் பதத்தையும் கூட் டிக் கொள்ளவேண்டு பேயாழ் வாரும் பணிப்பர் என்று பூரு வாசிரியரகள் நயமாக உரைப் பர்.

இவ்வாறு தோன்றிய முத லாழ்வார்களின் பெற்றிமையை மணவாள மாமுனிகள்,

மற்றுள்ள வாழ்வார்களுக்கு
முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல் செய்து
நாட்டையுய்த்தார் பெற்றிமையோ
ரென்று முதலாழ்வார்களென்னும்
பேரிவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து

என்கிறார். பெற்றிமையாவது 'ஜந்மநா வித்யயாச' என்னுமா போலே இவர்கள் அவதரித்த தனால் கல்வி நிறம் பெற்றதே ஆகும். இம்மூவரும் எல்லாத் திவ்ய தேசங்களிலும் சேர்ந் தேயிருப்பது தோன்ற,

ஐப்பசியிலோண மவிட்டம்
சதய மிவை
ஒப்பிலவா நாள்கள்
உலகத்தீர் - எப்புவியும்
பேசுபுகழ் பொய்கையார்
பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்று சிறப்பால்

என்று மாமுனிகள் கொண் டாடுகிறார்.

மறறை ஆழ்வார்களுக்கு முன் பாக அவதரித்துத் தமக்கு முன் னோடியாகவும் இருந்து, சொல வும், செயலும், நினைவும் ஒன்றுபட்டுப் பேசிய செவ்விய சொல்லை உலகுக் கீந்தப் பெருந் தகையராதலால் முதலாழ்வார் களைச் 'செஞ்சொற் கவிகள்' என்று நம்மாழ்வார் கொண்டா டுவது சாலப் பொருந்துமல் லவா!

முதலாழ்வார திருவடிகளே சரணம். *

## வெண்ணெயும் சான்றோர் உள்ளமும்

வெண்ணெய தன்னைச் சிரமபபடுததினால் தான் உருகும சானறோர் உள்ளம் பிறர் சிரமப்பட்டால தானே உருகும். எனவே வெண்ணெயைவிட சானறோர உள்ளமே மிகவும் உயர்ந்தது.

தொகுத்தவர். கமலா மாரியப்பன் - கோயம்புத்தூர்.

# கம்பன் கருத்தில் திருவேங்கடம்

டாக்டர் ந. சுப்புரெட்டியார் - சென்னை.

ஒரு பெருங்காப்பியத்தில் 'மலை கடல் நாடு வளநகர் பருவம்' முதலிய பல பொருள்கள் பற்றி ஆங்காங்குச் சுட்டிச் செல்லுதல் காப்பிய மரபாக இருந்து வருவதை நாம் அறிவோம். இக்கால ஆராய்ச்சி முறையில் நோக்கினால் கவிஞன் புவிஇயல் பற்றிய குறிப்புகளைத் தருகின்றான் என்று சொல்ல வேண்டும். கிட்கிந்தா காண்டத்தில் 'நாடவிட்ட படலத்தில்' இத்தகைய குறிப்புகளைக் காண்கிறோம். இராமபிரானது கட்டளைப்படி சுக்கிரீவன் சீதாப்பிராட்டியைத் தேடும்படி நாற்றிசையிலும் திசைக்கு இரண்டு வெள்ளம் சேனையுடன் வானரப்படைத் தலைவர்களை அனுப்புகின்றான். மேற்குத் திசையில் இடபனும் வட திசையில் சதவலியும் கிழக்குத் திக்கில் வினதனும், தென்திசையில் அங்கதனும் செல்லுகின்றனர். அங்கதனுடன் அநுமன், சாம்பவான் முதலிய முக்கிய வீரர்களும் செல்லுகின்றனர்.

புலர் மூலம் அறிந்த செய்திகளால் சீதாப்பிராட்டி தென் திசையில்தான் இருக்க வேண்டும் என்ற ஐயம் ஏற்படுகின்றது சுக்கிரீவனுக்கு. தென்திசையில் செல்லுபவர்கட்கு விந்திய மலை, நருமதை நதி, ஏமகூடமலை, பெண்ணையாறு, விதர்ப்ப நாடு, தண்டகவனம், முண்டகத்துறை, பாண்டுவின் மலை, கோதாவரி, சுவண நதி, கொங்கணதேசம், அருந்ததிமலை, மரகதப்பொருப்பு ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளையெல்லாம் தந்து திருவேங்கடமலை பற்றிச் சற்று விரிவான குறிப்புகளைத் தருகின்றான். இந்த இடங்களையெல்லாம் கடந்து வேங்கடத்தை அடையுமாறு பணிக்கின்றான் வானரவேந்தன்.



வடசொற்கும் தென்சொற்கும்
வரம்பிற்றாய் நான்மறையும்
மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்கெல்லாம்
எல்லையதாய் நல்லறத்துக்
கீறாய் வேறு
புடைசுற்றும் துணையின்றிப்
புகழ்பொதிந்தமெய்யேபோல்
பூத்து நின்ற
அடைசுற்றும் தண்சாரல்
ஓங்கியவேங் கடத்திற்சென்
றடைதிர் மாதோ.
--நாடவிட்ட 26

[வரம்பு-எல்லை; எல்லையதாய்-முடிவான பொருளையுடையதாய்; ஈறு-வரம்பு; புடை- பக்கம்; மெய்-சரீரம்; அடை-தேன் கூடு; சாரல்-தாழ்வரை]

என்ற பாடல் காண்க. 'வேங்கடத்திற் சென்றடைதிர்' என்ற தொடர் திருமங்கையாழ்வார் ஒரு திருமொழியில் (பெரி.திரு. 1.8) 'திருவேங்கடம் அடைநெஞ்சமே' என்று ஒரு முறைக்கு ஒன்பது முறை தம் நெஞ்சை நோக்கிக் கூறுவதை நினைக்கவைக்கின்றது. இன்னொரு திருமொழியில் (பெரி. திரு. 1.9) 'அண்ணா! வந்தடைந்தேன்; அடியேனை ஆட்கொண்டருளே' என்று பலமுறை வேண்டுவதையும் நினைக்கின்றோம்.

ஈண்டுக்குறிப்பிட்ட கம்பன் பாடலில் பல நுட்பமான செய்திகள் பெறவைத்திருப்பதைச் சிந்திக்கின்றோம். சமஸ்கிருதம் ஆதியில் திருவேங்கடமலைக்கு வடபுறத்திலுள்ள பல பகுதிகளில் மிகுதியாக வழங்கி வந்ததாதலின் அது 'வடமொழி' என்று வழங்கப் பெறுகின்றது. அங்ஙனமே அம்மலைக்குத் தென்புறத்தில் - தமிழகத்தில் வழங்கி வரும் தமிழ் மொழி 'தென்மொழி' எனப்படுகின்றது. இந்த இரண்டு மொழிகளும் மிகுதியாக வழங்கும் நிலங்களுக்கு இடையே நின்று எல்லை குறிப்பதனால் திருவேங்கடமலையை 'வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்று' என்கின்றான் கவிஞன். 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறுநல்லுலகம்' என்ற தொல்காப்பியச் சொற்றொடரில் திருவேங்கடமலையைத் தமிழ் உலகத்திற்கு வட எல்லையாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். (வடவேங்கடம் வேறு, இன்றைய திருவேங்கடம் வேறு என்பதைப் பிறிதொரு கட்டுரையில் 'ஸப்தகிரி'யில் நன்கு விளக்கப்பட்டுள்ளது) பிற்காலத்தார் திருவேங்கடத்தையே வடவேங்கடமாகக் கொண்டு பாடல்களை இயற்றியுள்ளனர். நான்கு வேதங்களிலும் அவ்வேதங்கட்டு உபபிருமணமாகிய இதிகாசம், புராணம் முதலிய மற்றைய நூல்களிலும் எடுத்துக் கூறப்படும் பொருள்களாகிய கடவுளர் யாவரினும் சிறந்த முழுமுதற்கடவுளான திருமாலைத் தன்னிடத்தில் கொண்டுள்ளது இது என்பது 'நான்மறையும் மற்றை நூலும் இடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையது' என்பதன் கருத்து என்பது அறியத்தக்கது. இந்த மலையின்கண் அறங்களெல்லாம் குறைவின்றி நிறைந்துள்ளன என்பதை 'நல்லறத்தின் ஈறு' என்ற சொற்றொடரால் குறிக்கின்றான் கவிஞன். இதற்குச் சமானமாக உடன் எடுத்துச் சொல்லத்தக்க மலை வேறொன்றும் இல்லையென்ற கருத்தை 'வேறு புடைசுற்றும் துணையின்றி' என்ற தொடர் விளக்குகின்றது. இவ்வுலகில் ஒருவரது பூத உடம்பு அழிந்தாலும் புகழ் உடம்பு அழியாது நிற்கும் என்று அறிஞர்களால் கொண்டாடப்பெற்றுத் திகழ்தல் போலத் திருவேங்கடமலையும் பிரளயத்திலும் அழியாது நின்று உலகிலுள்ளோர் பலராலும் துதி செய்யப் பெற்றுத் திகழ்தலால் அம்மலைக்குப் புகழ் பொதிந்தமெய்யை - அதாவது புகழுடம்பை - உவமையாகக் கூறினான்.

இவ்விடத்தில் சடகோபரின்,

'பரன்
சென்று சேர்திரு வேங்கடமாமலை
ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே'
--திருவாய் 3.3.8

என்ற திருவாக்கால் மாலவன் கோயில் கொண்டிருக்கும் மலையைத் தொழுதாலே நாம் செய்யும் வினைகள் எல்லாம் 'தீயினில் தூசாகும்' என்பது தெளிவாகின்றது. அங்ஙனமே.

திருமா லிருஞ்சோலை மலை-
என்றேன்; என்ன
திருமால் வந்து, என் நெஞ்சு
நிறையப் புகுந்தான்
--திருவாய் 10.8.1

என்று மற்றோர் திருவாய்மொழியிலும் குறிபிடுவர் ஆழ்வார். "திருமால் கோயில் கொண்டிருக்கும் 'திருமாலிருஞ்சோலை மலை' என்று உச்சரித்தாலே போதும் அத்திருமால் வந்து காட்சி தருவதற்கு" என்று கூறுவர். எம்பெருமான் படைப்பிலுள்ள அசித்தும்' வணங்கத்தக்கது என்பது இதனால் பெறப்படுகின்றது.

திருமாலின் திவ்விய தேசங்கள் நூற்றெட்டனுள் திருமலையும் ஒன்று; வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள் இது முதலாவது. நம்மாழ்வார் தமது முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் மங்களாசாசனம் செய்துள்ள திருவரங்கம் (திருவிருத். 28), திருவெஃகா (திருவிருத். 26), திருவேங்கடம் (திருவிருத். 31) மூன்று திருத்தலங்களும் 'கோயில், திருமலை, பெருமாள் கோயில்' என்று வைணவர்களால் சிறப்பித்துக் கூறப்பெறும் சொற்றொடரில் நடுநாயகமாக அமைந்து திகழும் திருத்தலம். இந்த மூன்று பாசுரங்களுள் திருவேங்கடத்தைக் குறிப்பிடும் பாசுரத்திற்குப் (31) பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீசூக்திகள் மிக்க சுவையுடன் அநுசந்திக்க வேண்டியவை. "கீழ் நீல முண்ட மின்னன்ன மேனிப் பெருமானுலகு" (பாசுரம் 29) என்று பரமபதத்தே தூதுவிட்டாள் (ஆழ்வார் நாயகி) அது, பரபக்தி, பரஞானம், பரமபக்தி யுக்தரானார்க்கல்லது புகவொண்ணு தேசமாகையாலே அவதாரங்களிலே தூதுவிடப்பார்த்தாள்; அதுவும் சமகாலத்திலுள்ளார்க்காய்ப் பின்னையில்லையாகையாலே பிற்பட்டாருக்கும் அநுபவிக்கும்படி சுலபமான திருமலையிலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே தூது விடுகின்றாள். 'திருமலை நோக்கிப் போகின்ற மேகங்களே! என்னுடைய தூதவாக்கியங்களைக் கொண்டு போய்ச் சொல்லுங்கோள் என்றால் சொல்லுகிறிலிகோள்; திருமலைக்குப் போகிற பராக்கிலே பேசாதே போகிறவற்றைக் கண்டு, சொல்ல மாட்டிகோளாகில் உங்கள் திருவடிகளை என் தலைமேலே வையுங்கோள் என்றால் வைப்புதி கோளோ? திருமலைக்குப் போவாருடைய திருவடிகள் உத்தேச்யமாயிறேயிருப்பது? திருமலைக்குப் போகிறவர்களைத் தலையிலே வைக்கக் கிடைக்குமோ? திருவடியை (அநுமனை)ப் பிராட்டி 'இங்கு ஓரிராத் தங்கிப் போகவேணு' மென்று அருளிச்செய்ய, 'ஒண்ணாது' என்று அவனும் மறுத்துப்போனாப் போலே போகாநின்றன" என்று.

இச்சூக்திகளின் பொருளைத் தெளிவுபடுத்துவோம். இரத்தினங்கள் ஒளி வீசுகின்ற திருவேங்கடமலைக்குப் போவதாகப் புறப்பட்ட இம்மேகங்கள் 'நீங்கள் எனக்காகத் திருமலையப்பன் பக்கல் தூது செல்ல வேண்டும்' என்று நான் வாய் வார்த்தை மாத்திரத்தால் வேண்டியதற்கு உடன் படுகின்றனவில்லை; அவற்றின் கால் என் தலையில் படும்படி சரணாகதி செய்தால் அதற்கு இசைந்து ஒருகால் உடன்பட்டுச் செல்லுமோ என்பது கருத்து. வானத்திற் பறந்து செல்லுகின்ற அன்னம் முதலிய பறவைகளைப் பரமபதநாதனிடம் செல்வனவாக நினைத்தது போலவே மேலே ஊர்கின்ற மேகங்களையும் திருவேங்கடமுடையான் பக்கல் செல்வனவாக ஆழ்வார் நாயகி நினைத்தமை உணரத்தக்கது. யாரேனும் எங்கேனும் வழிநடந்து சென்றாலும் திவ்விய தேசங்களுக்கு யாத்திரை செல்வதாகவே நினைப்பது ஆழ்வாரது தொழிலாகும்.

> வருவார், செல்வார் வண்பரி
> சாரத்து இருந்த என்
> திருவாழ் மார்வற்கு என்திறம்
> சொல்லார் செய்வது என்?
>
> -திருவாய் 8.3.

என்று இவர் திருவாய் மொழியிலும் சொல்வார். வழியில் சொந்த வேலையாகச் செல்பவர்கள் எல்லாரும் திருவண்பரிசாரம் என்னும் திருப்பதிக்குச் செல்வதாகவன்றோ பாவனை நிகழ்கின்றது. தூது விடுதற்கு உரியதைத் தன் தலைமேல் அடிவைத்துச் செல்லுமாறு வேண்டுதலை,

> எம்கானல் அகம்கழிவாய்
> இரைதேர்ந்துஇங்கு இனிதமரும்
> செங்கால மடநாராய்!
> திருமூழிக் களத்து உறையும்
> கொங்குஆர் பூந்துழாய்முடி
> எம்குடக்கூத்தர்க்கு என்தூதாய்
> நும்கால்கள் என்தலைமேல்
> கெழுமீரோ நுமரோடே
>
> --திருவாய். 9.7.1

என்ற திருமூழிக்களத்து எம் பெருமானிடம் பறவைகளைத் தூதுவிடுவதாக அமைந்த திருவாய்மொழியில் காணலாம்.

கம்பன் திருவேங்கடத்தைப் பற்றிப் பேசும் பாடல்களைக் காட்டும் பாங்கில் உள்ள நம்மைத் திருவேங்கடம் பற்றிப் பேசும் ஆழ்வார் பாசுரத்திற்கும் அதற்குப் பெரியவாச்சான் பிள்ளை வரைந்துள்ள உரை வளத்திற்கும் நம்மை இழுத்துச் சென்றுவிட்டன. எனினும் திருவேங்கடத்தை விட்டு விலகிப் போகவில்லை!

அடுத்து, தென்திசை நோக்கிச் செல்லும் வானரவீரர்கட்குத் திருமலையில் வதியும் மாமுனிவர்களின் பெருமையைப் பேசுகின்றான் அருக்கன் மைந்தன்.

இருவினையும் இடைவிடா
எவ்வினையும்
இயற்றாதே இமையோர் ஏத்தும்
திருவினையும் இடுபதந்தேர்
சிறுமையை
முறையொப்பத் தெளிந்து
நோக்கியும்
கருவினைய திப்பிறவிக்
கென்றுணர்ந்தங்
கதுகளையும் கடையின்
ஞானத்து
அருவினையின் பெரும்பகைஞர்
ஆண்டுளரீண்
டிருந்தும்அடி வணங்கற் பாலார்.
--நாடவிட்ட 27

[இருவினை-நல்வினை, தீவினை; இமையோர்-தேவர்கள்; ஏத்தும்-புகழும்; இடுபதம்- பிச்சையாக இடும் சோறு; கரு-மூலகாரணம்; களையும்-நீக்குதற்கு உரிய; கடை- எல்லை]

என்ற பாடலில் இதனைக் காணலாம். இந்தப் பாடலில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெளிவுபடுத்துதல் இன்றியமையாதது.

அம்மலையில் வாழும் மாமுனிவர்கள் வினைகள் விளைவதற்குக் காரணமான எச்செயல்களையும் செய்யார். மனிதர்கள் எத்தொழில்களைச் செய்தாலும் அவை புண்ணிய பாவங்கட்குச் சம்பந்தப்பட்டு அவற்றிற்குரிய வினைப்பயனை ஊட்டும் என்பது வினை பற்றிய உண்மை. தீவினை இரும்பு விலங்கு போன்றது, நல்வினை பொன்விலங்கு போன்றது என்ற உண்மையை அறிந்தவர்கள் இம்முனிவர்கள்; 'ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும் பெற்றியர்' இவர்கள். இந்த இருவினைகளும் வீடுபேறு அடைவதற்குத் தடையாக நின்று பந்தப்படுத்தும் என்ற உண்மையைத் தெளிந்தவர்கள். வினை என்பது மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் (மனம் வாக்கு காயங்களாலும்) செய்யப்பெறும் புண்ணிய பாவங்கள். இந்த வினை பழவினை (சஞ்சிதம்) நுகர்வினை (பிராரப்தம்), எதிர்வினை (ஆகாமியம்) என மூன்று வகைப்படும். பழவினையானது, பிறப்பு அனாதியாய் வருதலின் உயிர்களால் அளவின்றி ஈட்டப்பெறும் வினைத்தொகுதிகள்; நுகர்வினையாவது அவ்வினைத் தொகுதிகளுள் இறந்த உடம்புகளால் பயன் நுகர்ந்தன போகப் பிறந்த உடம்பால் அநுபவிக்கத் தொடங்கியவை; எதிர்வினையாவது எடுத்த இப்பிறப்பில் செய்யப்பெறுபவை. இவ்வினைகள் பிறப்புக்குக் காரணமாதல் தெளியப்படும். இந்த தத்துவ உண்மைகளையெல்லாம் தெரிந்து தெளிந்த திருமலையில் வாழும் முனிவர்கள் நாம் இருந்த இடத்திலிருந்தே திக்கு நோக்கித் தண்டம் சமர்ப்பிப்பதற்கு உரிய பெருமையையுடையவர்கள் என்று பேசுவான் வானர வேந்தன்.

மேலும் கூறுவான்: "திருமலையில் உடல் தூய்மையும் மனத்தூய்மையும் உடைய அந்தணர்கள் இறங்கி மூழ்கி நீராடும் துறைகளும் ஆறுகளும் உள்ளன. முனிவர்கள் வசிக்கின்ற ஆசிரமங்கள் உள்ளன; மேகங்கள் தவழும் தாழ்வரைகள் அம்மலையைச் சூழ்ந்துள்ளன. தேவமாதர்கள் தங்கள் இசைப்பாட்டுக்கு ஒத்து வருமாறு கின்னரம் என்னும் இசைக்கருவிகளின் நரம்புகளை வருடுந்தோறும் உண்டாகும் ஓசையினால் யானைகளின் இளங்கன்றுகளும் புலியின் குட்டிகளும் தம்முள் பகையின்றி உறங்கும் இடங்கள் அம்மலையில் உள்ளன. இவற்றையெல்லாம் எடுத்துக்கூறும் முகத்தான் கம்பநாடன் வானரவேந்தன் வாய்மொழியாக,

தோதவத்தித் தூய்மறையோர்
துறையாடு
நிறையாலும் சுருதித் தொன்னூல்
மாதவத்தோர் உறைவிடனும்
மழையுறங்கும்
மணித்தடனும் வான மாதர்
கீதம்ஒத்த கின்னரங்கள்
இன்னரம்பு
வருடுதோறும் கிளக்கும் ஓதை
போதகத்தின் மழக்கன்றும்
புலிப்பறழும்
உறங்கிடனும் பொருந்திற் றம்மா"
--நாடவிட்ட 28

[தோதவத்தி-தூய்மையான ஆடை; துறை- துறைகள்; நூல்-சாத்திரம்; மழை-மேகங்கள்; தடன்-தாழ்வரைகள்; கின்னரம்-ஓர் இசைக்கருவி; வருடுதல்-தடவுதல்; ஓதை-ஓசை; போதகம்-யானை]

இத்தகைய சிறப்புவாய்ந்த திருமலைக்குச் செல்லாது ஒதுங்கிச் செல்லுமாறு அடுத்து அறிவுறுத்துகின்றான் அக்கோமகன்.

கோடுறுமால் வரையதனைக்
குறுகுதிரேல்
உம்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதிர் ஆதலினால் விலங்குதிர்
--நாடவிட்ட. 29

[கோடு-சிகரங்கள்; மால்வரை-பெரியமலை; கொடுமை-கொடும் பாவங்கள்; வீடு உறுதிர்- மோட்சமடைவீர்; விலங்குதிர்-விலகிச் செல்லுங்கள்]

திருவேங்கடமலையை நெருங்கியவுடனே அப்புனிதத் தலத்தின் மகிமையால் கொடும் பாவங்கள் யாவும் மறைந்து வீடு பேறு கிடைத்துவிடுமாதலாலும் இதனால் இராம காரியத்திற்குக் குந்தகம் விளையுமாதலாலும் அம்மலையை வணங்கின நிலையில் விலகிச் செல்லுமாறு அறிவுறுத்துகின்றான். அம்மலை மிக்க தூய்மையுள்ளதாதல் பற்றி இராவணன் அங்குச் சென்றிருக்க மாட்டான் என்பது திண்ணம் என்பதையும் குறிப்பாற் புலப்படுத்துகின்றான்.

தெற்குத் திசை நோக்கிச் சென்ற வானர வீரர்கள் பல இடங்களில் சீதாப் பிராட்டியைத் தேடிப் பார்த்துக் கொண்டு அருந்ததி, மரகத மலைகளைக் கடந்து திருமலைக்கு வருகின்றனர். இந்த நிலையிலும் கம்பநாடன் திருமலையின் தன்மையைக் கூறுகின்றான் தன் கூற்றாக.

முனிவரும் மறைவல்லோரும்
முந்தைநாட் சிந்தை மூண்ட
வினைவரு நெறியை மாற்றும்
மெய்யுணர் வோரும் விண்ணோர்
எனைவரும் அமரர் மாதர்
யாவரும் சித்தர் என்போர்
அனைவரும் அருவி நன்னீர்
நாளும்வந் தாடு கின்றார்
--ஆறுசெல். 34

[முனிவர்-இருடிகள்; மறைவல்லோர்-வேதம் அறிந்த அந்தணர்களும்; முந்தைநாள்- முற்பிறப்பு; சிந்தை மூண்ட-மனப்பூர்வமாகச் செய்த; நெறி-நரகநெறி; மாறனும்- ஒழிக்கவல்ல; மெய்யுணர்வோர்-தத்துவ ஞானிகள்; விண்ணோர்-தேவர்கள்; அமரர் மாதர்-தெய்வ மகளிர்]

முனிவர் முதலிய இம்பர் உலகத்தவரும், தேவகணங்களாகிய உம்பர் உலகத்தவரும் முற்பிறப்பில் செய்த தீவினைகளால் நேரிடக்கூடிய நரக நெறியை ஒழிக்கவல்ல தத்துவ ஞானிகளும், தேவர்களும், தெய்வ மகளிரும், சித்தர்களும் அருவி நீரில் எப்போதும் நீராடுகின்றனர். கோனேரி, ஆகாச கங்கை, பாபவிநாசம் (பாதாள கங்கை), பாண்டவ தீர்த்தம், குமாரதாரை, தும்புருதீர்த்தம், ஆழ்வார்தீர்த்தம் (கபிலதீர்த்தம்) முதலிய தீர்த்தங்களை மனதில் கொண்டு கவிஞன் நீராடுதுறைகளாகக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

அம்மலையில் தேவர்களும் வந்து தவம் இயற்றுதலையும் குறிப்பிடுகின்றான் கவிஞன்.

பெய்த ஐம்பொறி
யும்பெருங் காமமும்
வைத வெஞ்சொலும்
மங்கையர் வாட்கணின்
எய்த வஞ்சக
வாளியும் வென்றுநற்
செய்த வம்பல
செய்குநர் தேவரால்
--ஆறுசெல். 35

[பெய்த-தம் உடம்பிற் பொருந்திய; வைத-திட்டிய; வெம் சொல்-கொடியசொல்; வாள் கண்- வாள்போன்ற கண்; வென்று-சயித்து; செங்குநர்-செய்கின்றனர்]

தேவர்கள் திருவேங்கட மலைக்குப் போந்து ஐம்பொறிகளை அடக்கி, காமவேதனையின்றி, பிறர் தம்மை வைதாலும் அதனைப் பொருட்படுத்தாது மகளிரை மனத்தினாலும் கருதாது பல தவங்களைச் செய்கின்றனர் என்று குறிப்பிடுகின்றான்.

திருவேங்கடமலை தன்னை வந்து அடைந்தோருக்கு வீடு பேற்றையும் நல்கும் என்பதையும் காட்டுவான் கவிஞன்.

வலங்கொள் நேமி
மழைநின்ற வானவன்
அலங்கு தாளிணை
தாங்கிய அம்மலை
விலங்கும் வீடுறு
கின்றன மெய்ந்நெறிப்
புலன்கொல் வார்கட்(கு)
அனையது பொய்க்குமோ
--ஆறுசெல் - 36.

[வலம்-வெற்றி; நேமி-திருவாழி; மழை நிறம் வானவன்-சீநிவாசன்; அலங்கு- விளங்குகின்ற; தாள் இணை - இரண்டு திருவடிகள்; வீடு-மோட்சம்; மெய்நெறி- உண்மையான மார்க்கம்; பொய்க்குமோ-தவறுமோ]

சீநிவாசன் எழுந்தருளியிருக்கும் பெருஞ்சிறப்பு வாய்ந்த திருவேங்கட மலையில் வாழ்

(14-ஆம் பக்கம் பார்க்க)

# திருக்கோயில் அமைப்பும் வழிபாடும்

திரு. எஸ். நாராயணசுவாமி - திருவிடைமருதூர்.

சிவாலயமானது, ஆன்மாக்கள் வழிபட்டு உய்தற்பொருட்டுச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடமாம். "ஆ" என்பது பசு என்றும், (உயிர்) "லயம்" என்பது ஒடுங்குதல் என்றும் கூறுவர். அதாவது இறுதிக் காலத்தில் உயிர்கள் ஒடுங்குகின்ற (சேர்கின்ற) இடமாகும். திருக்கோயில்களில் செய்யப்படும் பிரதிஷ்டை, பூஜை, உற்சவம், பிராயச்சித்தம் முதலிய கிரியைகள் எல்லாம் வேத சிவாகமங்களிலே தெளிவாகக் காணலாம்.

## நூல்கள்

நான்கு வேதங்களும், இருபத்தெட்டு சிவாகமங்களும், பாஞ்சரத்ராகமம், வைகானஸ ஆகமம், சாக்த ஆகமங்கள், மகாபுராணங்கள், சாத்திரங்கள், தோத்திர நூல்களான திருமுறைகள் மற்றும் நாலாயிர திவ்யப் பிரபந்தம் முதலியன யாவும் இறைவன் பெருமையினைக் கூறுவனவாகும்.

மக்களின் வழிபாடு இரு வகைப்படும். அவைகள் அக வழிபாடு என்றும், புறவழிபாடு என்றும் கூறுவர். புறவழிபாடானது அகவழிபாட்டின் உண்மையை விளக்குதற்கும் ஞானத்தைப் பெறுதற்கும் கருவியாக அமைந்துள்ளது.

சைவ சித்தாந்த சாத்திரங்களில் மோக்ஷமாகிய வீட்டை அடைவதற்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு மார்கங்கள் உள்ளன. அவை தாசமார்க்கம், சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனப்பெயர் பெறும்.

## சரியை

புறத்தொழில் மாத்திரையால் சிவபெருமானுடைப் உருவத்திருமேனியை வழிபடுதல்.

## கிரியை

அகத்தொழில் புறத்தொழில் இரண்டாலும் இறைவனுடைய அருவுருவத்திருமேனியை வழிபடுதல்.

## யோகம்

அகத்தொழில் மாத்திரத்தால் சிவபெருமானுடைய அருவத்திருமேனியை வழிபடுதல்.

## ஞானம்

அறிவு மாத்திரத்தினால் உருவம், அருவுருவம், அருவம் என்னும் மூவிதத் திருமேனிகளையும் கடந்து நிற்கும் அகண்டாகார ஜோதி மயமான சிவ் பெருமானை நோக்கிச் செய்யும் வழிபாடாகும்.

இந்த மார்க்கங்கள் நான்கும், மோக்ஷ சாதனமாய் நிற்கும். சரியை இல்லாமல் கிரியையும், கிரியை இல்லாமல் யோகமும், யோகமில்லாமல் ஞானமும், ஞானமில்லாமல் இறைவனுடைய திருவடிப்பேறு கிய மோட்சமும் கைகூடா.

நம் நாட்டிலுள்ள சிவாலயங்களும், விஷ்ணு ஆலயங்களும் உன்னதமான தத்துவ உண்மைகளையும், விஞ்ஞானத்தையும் அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன. மனிதனை தெய்வ நிலைக்கு உயர்த்தும் தொழிற்கூடமாகத் திருக்கோயில்கள் விளங்குகின்றன.

## ஆலயத்தினுள்

திருக்கோயிலினுள் பெரும்பாலும் இராசகோபுரம், பிரகாரம், முகமண்டபம், ஸநபன மண்டபம், அலங்காரமண்டபம், மகா மண்டபம், அர்த்தமண்டபம், அந்தராளம், கருப்பக் கிருகம், மற்றும் விமானம் பலிபீடம், கொடிமரம் முதலியன அமைக்கப்பட்டிருக்கின்றன. (மண்டபத்தில் இன்னும் பல உள்ளன.)

## மூன்றுவித ஆலயங்கள்

சுவாமிக்கு மட்டும் (சிவன்) ஆலயம் எழுப்புதல் கேவல ஆலயம் என்றும், சுவாமி மற்றும் அம்பிகை உள்ள ஆலயம் சங்கீர்ணலயம் என்றும், சுவாமி, அம்பாள், மற்றைய பரிவார மூர்த்திகளோடு விளங்கும் ஆலயம் மிச்சராலயம் என்றும் போற்றுவர்.

மேலும் ஆலயத்தை சரீரப் பிரஸ்தாரம், இருதயப் பிரஸ்தாரம் என இரு வகையாகவும் என்பர். இவற்றுள் இருதயப் பிரஸ்தாரம் சிதம்பரம் முதலான தலங்களையும். சரீரப்பிரஸ்தாரம் மற்றைய ஆலயங்களையும் குறிக்கும்.

## தத்துவம்

கருப்பக்கிருகம் ஆன்ம தத்துவத்தையும், அர்த்தமண்டபம் வித்யா தத்துவத்தையும், மகா மண்டபம் சிவதத்துவத்தையும் குறிக்கும்.

கருப்பக்கிருகத்தில் பிரதான மூர்த்தியாகிய சிவலிங்கத்தை வைத்தோ அல்லது வேறு திருவுருவங்களை வைத்தோ வணங்கப்படும் இடமாகும். கருப்பக்கிருகத்திற்கு மேல் விமானம் (ஸ்தூபி) இருதயகமலாகாரமாக விளங்கும். அர்த்த மண்டபம், மகா மண்டபம், ஸ்நபன மண்டபம், அலங்காரமண்டபம், சபா மண்டபம் என்பன ஐந்து கலைகளான நிவர்த்தி கலை, பிரதிட்டைகலை, வித்யா கலை, சாந்தி கலை, சாந்தியாதீத கலை ஆகும்.

ஐந்து பிரகாரங்களும் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் எனும் ஐந்து வித கோசங்களைக் குறிப்பதாகும்.

ஆலயங்களில் அமைக்கப்பட்டிருக்கும் கோபுரங்களைப் பிரம்மாந்திர மத்ய கபாலத்துவாரம் என்று யோகிகள் கூறுகின்றனர்.

துவஜ ஸ்தம்பமாவது யோகியானவன் பிராண வாயுவை நடுநாடியாகிய சுஷும் நையில் அசைவற்று நிறுத்திக்கொண்டு தியானிக்கில் கரணங்கள் யாவும் நின்று சிவதரிசனம் கிட்டும்.

## ஆலயமே உடல்

"ஊன் உடம்பே ஆலயம்" என்ற வாக்கிற்கிணங்க ஆலயமானது மனித உடலின் அமைப்பாகவே விளங்கி வருகின்றது. இதனை நமது பெரியோர்கள் கூறுகையில் பாதங்கள் கோபுரமாகவும், கரங்கள் ஆவரணங்களாகவும், முழங்கால் முகமண்டபமாகவும், மார்புப்பகுதி மற்றும் கழுத்துப் பகுதி அர்த்தமண்டபத்தையும், மகாமண்டபத்தையும் குறிக்கும். இருதயமானது நடராஜர் சன்னிதியையும், வலது செவி, இடது செவி ஆகியன தட்சிணாமூர்த்தி, சண்டேஸ்வரர் இருப்பிடத்தையும் குறிக்கும். (வாய் கோபுரவாசல் என்பது திருமந்திர வாக்கு) இருகண்கள் சூரிய சந்திரனாகவும், புருவமத்தியில் மூலஸ்தானப் பெருமான் அருள் வழங்கும் இடமாகும். உச்சந்தலை விமானத்தைக் (கருப்பக்கிருக விமானம்) குறிக்கும். வயிற்றுப்பகுதி மற்றும் தொப்புள், பலிபீடம், அதிகார நந்தி, கொடிமரம் இவற்றைக் குறிக்கும். இந்த மனித உடலைப் போன்றுதான் கலசஸ்தாபனமும் அமைக்கப்படுகிறது.

"ஆலயம் தொழுவது சாலமும் நன்று" என்ற அருள்வாக்கிற்கிணங்க மனிதனை மனிதனாக்குகின்ற உத்தமமான இடம் ஆலயம் ஒன்றைத்தவிர வேறு எதுவும் இல்லை. அமைதிதந்து ஆன்மீகத்தை உணர்த்தும் உயர் இடங்கள் நமது திருக்கோயில்கள் ஆகும். *

---

(12-ஆம் பக்கத்தொடர்ச்சி)

கின்ற விலங்குகளும் வீட்டுலகத்தை அடையும் என்றால் சன்மார்க்கத்தில் ஒழுகுகின்ற தத்துவஞானமுடையவர்கட்கு வீட்டுலகம் கிடைப்பது தவறுமோ என்கின்றான் கவிஞன்.

வாசமாமலர் நாறுவார் பொழில்
 சூழ்தரும் உலகுக் கெல்லாம்
தேசமாய்த் திகழும் மறைத்திரு
 வேங்க டம்அடை நெஞ்சமே
பெரி.திரு. 1.8.9

என்று திருமங்கையாழ்வாரால் சிறப்பிக்கப்பெற்ற அம்மலையை அடைகின்றனர் வானர வீரர்கள்.

ஆய குன்றினை
 எய்தி அருந்தவம்
மேய செல்வரை
 மேவினர் மெய்ந்நெறி
நாய கன்றனை
 நாளும் வணங்கிய
தூய நற்றவர்
 பாதங்கள் சூடினார்
--ஆறுசெல். 37

[மெய்ந்நெறி-வீட்டுலகநெறி; மேவினர்-கிட்டினர்]

அம்மலையில் வாழும் பாக்கியவான்கள் அழியாத வீட்டுலகப்பேற்றினை அளிக்கும் திருவேங்கட முடையானை எப்போதும் வணங்கப்பெற்ற பரிசுத்தமான சிறந்த தவத்தை மேற்கொண்டிருப்பவர்கள். அவர்களின் திருவடிகளை வானர வீரர்கள் தம் தலைமேல் கொண்டு வணங்கினர் என்கின்றான் கவிஞன். சுக்கிரீவன் மலைக்குச் செல்லாது வணங்கி ஒதுங்கிப் போகுமாறு பணித்திருந்தும் அக்கட்டளையை மீறி மலைக்குச் சென்று பெரியோர்களை தரிசித்தது- இப்புண்ணியத்தின் பயனாலேனும் ஒருகால் பிராட்டியைக்காண முடியுமோ என்ற எண்ணத்தினால் செய்தது போலும். இங்ஙனம் கம்பன் வாக்கில், காவியப் போக்கில் மாலவன் குன்றத்தின் பெருமை பேசப் பெறுகின்றது.

*****

# வினைதீர்க்கும் வேங்கடவன்

கவிஞர் சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்.

வேண்டியோ வேண்டாமலோ பிறந்துவிட்ட நாம் இறைவனிடம் வேண்டுவது வினையகற்ற வேண்டும் என்றே. நல்வினை தீவினை என்னும் இவ்விரண்டு வினைகளால் நாம் பிறக்கிறோம். நல்வினை என்பது பொன்விலங்கு, தீவினை என்பது இரும்பு விலங்கு ஆகும். எனவே உலோகம் எதுவானாலும் விலங்குதான். தங்கத்தால் ஆன கத்தி என்று கழுத்தை நாம் பதம் பார்க்க முடியாது. அதுபோல் நல்வினைகள் மட்டும் செய்து நிறைய சேர்த்து வைத்துள்ளோம் என்று மகிழ முடியாது.



நம்மைச் சூழும் வினையகற்ற வேண்டும் என்கின்ற விண்ணப்பங்கள் நாள்தோறும் எழுந்த வண்ணமே இருக்கின்றன. நமக்கு நோய் வந்த போது அதைத் தீர்க்க மருந்து வரை நாடுவது போல் வினை வசத்தால் அல்லது விதிவசத்தால் இவ்வுடல் நலியப்படும் போது நமதுள்ளம் நம்பிக்கையோடு நாடுவது இறைவனை ஆகும். இது இன்று நேற்று ஏற்பட்ட பழக்கமல்ல, இதிகாச காலம் தொட்டு மக்களிடையே பரவிக் கலந்ததாகும். அப்படிப் பிறவிகளால் நாம் துயருறும்போது அதைத்துடைப்பதிலே முன்னோடியாக நின்று நிலவுபவன் திருவேங்கடமுடையவன் என்பது பொருந்தும்.

மக்களுடைய துயர்கள், வினைகள் களையப்படுவதாலேயே திருமலையில் நாள்தோறும் அதிகரித்து வரும் பக்தர்கள் கூட்டம் நமக்கு நல்லதொரு சான்று ஆகும். அதுமட்டுமல்ல, இதோ செப்பும் பாட்லைப் பாருங்கள்.

"செடியாய வல்வினைகள் தீர்க்கும்
திருமாலே
நெடியோனே! வேங்கடவா!
நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய்
காண்பேனோ!"

செடியாய வல்வினைகளைத் தீர்ப்பவன் திருமால், அவன்

வேங்கடவன் ஆகும். இங்குச் செடி என்பது நம் பிறப்பால் செடிபோல் நம்முடன் வேரூன்றி விட்ட வினைகள் ஆகும். அதுபோல் இங்கு நெடியோன் என்பதற்கும் புது விளக்கமுண்டு. நெடியோன் என்றால் நீண்டவன், நெடிது (உயரமாய்) வளர்ந்தவன், அல்லது உயரமானவன். இப்படிப்பட்ட விளக்கங்களை மட்டும் இதுவரை கண்டு வந்து இருக்கிறோம். நெடியோன் என்றால் **அழகன்** என்னும் பொருள் உண்டு. அழகு அசிங்கத்தை களைவது இயல்பு. வினைகள் நம்மோடு ஒட்டிக்கொள்வது அசிங்கம் ஆகும். அதைக் களைய அழகு வேண்டும். அந்த அழகை வந்து தீரப்பவன் வேங்கடவன். சற்றுப் பார்ப்பதற்கு லட்சணம் குறைந்த பெண்ணுக்கு அழகு சாதனங்களைப் பூட்டிவிடும்போது அப்பெண் அழகு பெற்று விடுகிறாள். அதுபோல் வினைகளால் அழகிழந்த நமதுள்ளம் அது நீக்கப்படும் போது நம் முகம் பொலிவுறுகிறது. அதைத் தருபவன் நெடியோன் வேங்கடவன் ஆகும். மாந்தர்க்கு வரும் வினை மட்டுமல்ல, எவ்வுயிர்க்கும் ஏற்படும் இன்னல்களையும் தீர்ப்பவன் வேங்கடவன். முதலையால் கால்கள் பிடிக்கப்பட்டு துன்புற்ற யானையானது ‘ஆதிமூலமே’ என்றதும் அககணமே வந்து காத்தவர் திருமால்.

‘கோவிந்தா! வாசுதேவா! கண்ணா!’ என்று கதறியபோது வந்து காத்தருளினான் பாஞ்சாலியை. குயவனாய்ப் பிறந்து மண்பாண்டம் செய்து பிழைக்கும் பக்தன் தன்மேலுள்ள பக்தியினால் இரண்டு கரங்களையும் இழந்தபோது கோவிந்தன் அவனுக்கு சேவகனாய் வந்து சேவை செய்த நிகழ்ச்சி மறக்கக் கூடியதா? இது போன்ற பல நிகழ்ச்சிகளை திருவேங்கடவன் செய்து காட்டினான், தற்போதும் காட்டிக் கொண்டு இருக்கிறான் என்பதும் உண்மை.

நம் துன்பங்களுக்குக் காரணம் நம் வினைகளே ஆகும். **ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்** என்கிறார் இளங்கோவடிகள். முன்னம் செய்த வினை இங்ஙனம் வந்து மூண்டதுவே என்ற புலம்பலையும் நாம் கேட்கின்றோம். லட்சுமணப்பெருமாளை சீதாதேவி அவமதித்த காரணத்தால் அரக்கியர் இடையே சிறைவாசமும், பின்னர் அக்கினிப்பிரவேசமும் செய்யும்படி ஆயிற்று. கோவலன் கொலையுண்டதும் ஊழ்வினையே காரணம்.

ஒரு பூசாரி அறியாமையால் இரண்டு ஆட்டுக்குட்டிகளை காளிக்குப் பலியிட்டான். அவ்வாட்டுக் குட்டிகள் மறுபிறப்பில் இராஜ குமாரனாகவும் மந்திரி குமாரனாகவும் பிறந்து அதே பூசாரியை காளிக்கு பலியாக்கினார்கள். இவைகளின் மூலம் வினைகளே நம் துன்பங்களுககுக காரணம என்பது புலப்படும். இவ்வினைகளை இறைவன் மூலம் அவன் வழிபாட்டின் மூலம் களையவேண்டும். அதனால்தான் அருணகிரிப்பெருந்தகையார் “**வினை ஓட விடும் கதிர்வேல் மறவேன்**” என்கிறார். அதைச் சற்று மாற்றி “**நின்று பகைகெடுக்கும் நின்கையில் வேல் போற்றி**” என்று கூறுகிறார் ஆண்டாள் நாச்சியார். இங்குப்பகை என்பதற்கு பகையும், வினையும் என்பது பொருளாகும். பகையால் துன்பம் வரும். அத்துன்பம் வினையாகும். எனவே இரு பொருள்பட அம்மையார் உரைத்தார்கள்.

“பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்”

இக்குறளின் அமுத வாக்கினையும் அறிந்துணர்க. ஒருவர்க்கு முன்னே நாம் செய்த இன்னல் பின்னால் நமக்கே அது இன்னலாக வருகிறது. எனவே நம் துன்பங்களுக்குக் காரணம் நாமே என்றறிந்து நமதுள்ளம் பண்பட பக்திநெறியில் ஈடுபட்டு திருவேங்கடவனை வழிபட்டு திருமால் அருளால் திருவருள் பெற்று செழிப்புடன் வாழ்வோமாக.

* * * *

## எட்டு புஷ்பங்கள்

1. அஹிம்சை 2. இந்திரியங்களை அடக்குதல் 3. ஸகல ஜந்துக்களிடமும் கருணை. 4. பொறுமை 5. ஞானம் 6. தபஸ் 7. தயாநம் 8. ஸத்யம் எனபன.

தொகுப்பு - அதிகார சங்கிரகம் உரை எனனும தொகுப்பு நூல்

திருமதி. ஆர். ஜானகி - சென்னை.

# மகாபாரதத்தில் ஐந்தின் பெருமை

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

குந்தியிடம் நான்தான் மூத்த பிள்ளை என்று கர்ணன் கூறி விட்டு, உனக்கு எப்படியும் ஐந்து பிள்ளைகள் குறைவில்லாமல் இருப்பார்கள் என்றும் தேற்றுகிறான்.

பீஷ்மரின் போர்க்கொடியில் ஒரு பனை மரமும் அதற்குப் பக்கத்தில் ஐந்து நட்சத்திரங்களும் குறிக்கப்பட்டிருக்கும்.

சல்லியன், அசுவததாமன், பூரிசிரவஸ், சித்ரசேனன், சலனின் புதல்வன் ஆகிய ஐவரும் ஒரே சமயத்தில் அபிமன்யுவை எதிர்த்தார்கள்.

ஐந்தாம் நாள் போரின் ஆரம்பத்திலேயே துரியோதனன் பெரிய தோல்வியை அடைந்தான்.

பத்தாம் நாள் போரில் சிகண்டி பீஷ்மரை ஐந்து பாணங்களால் அடித்தான்.

பதினான்காம் நாள் யுத்தத்தில் துர்மர்சனன், துஸ்ஸஹன், துர்மதன், துர்த்தரன், ஜயன், ஆகிய ஐவரையும் பீமன் கொன்றான்.

மயங்கினவன், பயந்தவன், தேரை இழந்தவன், கவலையுடன் இருப்பவன், கெஞ்சுபவன் ஆகிய ஐந்து பேர்களையும் பாணத்தால் அடிக்காதே என்று வெட்டுண்டு விழுந்த பூரிசிரவஸ், அர்ச்சுனனைப் பார்த்துச் சொல்லுகின்றான்.

பரசுராமர் சாபம், அந்தணன் சாபம், பீஷ்மரின் அவமதிப்பு, கவச குண்டலங்கள் இழப்பு, சல்லியனின் நிகழ்ச்சி - ஆகிய ஐந்து நிலைகளும்தான் கர்ணனின் தோல்விக்கும் காரணமாக அமைந்தன.

பரசுராமன் கர்ணனை சபித்தது, மைத்ரேய மகரிஷி துரியோதனனை சபித்தது, யுதிஷ்ட்டிரர் - பெண் குலத்தைச் சபித்து, பாண்டவரை - கிந்தம முனிவர் சபித்தது, ஊர்வசி - அர்சுனனை சபித்தது ஆகிய ஐந்து சாபங்கள் மகாபாரதத்தில் வரும் மிக முக்கிய சாபங்களாகும்.

அம்புப் படுக்கையில் உள்ள பீஷ்மரைப் பார்க்க யுதிஷ்டிரர், கிருஷ்ணன், கிருபர், வியாசர், விதுரர் ஆகிய ஐவரும்தான் முதன் முதலில் வருகிறார்கள்.

பெரியோர்கள், சம்பந்திகள், உறவினர்கள், அன்பர்கள், ஆசிரியர்கள் ஆகிய ஐந்து வகையானவர்களை யுத்தத்தில் மரணமடையச் செய்து தற்போது உங்கள் முன் தலை குனிந்து யுதிஷ்ட்டிரன் நிற்கின்றான் என்று கண்ணன் பீஷ்மரைப் பார்த்துக் கூறுகின்றான்.

வாய் - வயிறு, தசை - எலும்பு - இரத்தம் ஆகிய ஐந்தும் மானிடர்களுக்கு ஒரே மாதிரியாக இருந்தாலும், அரச பதவி கிடைக்கும் போது மாறுபட்டு விடும். மேலும் சிறப்பும் பெற்று விடும் என்று பீஷ்மர் கூறுகின்றார்.

தானம் கொடுக்க வேண்டும், வேள்விகள் நடத்த வேண்டும், வேதம் ஓத வேண்டும், குடிமக்களைக் காக்கவேண்டும், திருட்டை ஒழிக்க வேண்டும் ஆகிய ஐந்து வித நோக்கங்களை நிறைவேற்றினால்தான் அது அரச தர்மமாகும் என்று பீஷ்மர் தெரிவிக்கின்றார்.

அக்னி, ஆதித்தன், மிருத்யு, குபேரன், யமன் ஆகிய ஐந்து தேவதைகளின் அம்சத்தோடு தான் அரசன் அரசாள வேண்டும்.

சுமைதூக்காத காளை, கறவாத பசு, மலட்டு மனைவி, பாதுகாவாத அரசன், கற்பிக்காத ஆசார்யன் ஆகிய ஐவர்களால் உலகத்திற்குப் பலன் இல்லை.

வணிகம் செய்யும் போது தர்மம் செய்ய வேண்டும், நேர்மையாக சம்பாதிக்க வேண்டும், வேதம் ஓத செலவிடவேண்டும், பசுக்களைக்காப்பாற்ற வேண்டும், யாகம் செய்ய உதவ வேண்டும் என்ற ஐந்து வித நிலைகளை பீஷ்மர் உணர்த்துகிறார்.

ஒரே வித நோக்கமுள்ளவன், பக்தியுள்ளவன், நண்பரால் உபகாரம் பெற்றவன், நேர்மையாளன், உறவினன் ஆகிய ஐவரையும் அரசன் எப்போதும் நண்பனாக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும் பீஷ்மர் அறிவுறுத்துகின்றார்.

புலி, சிறுத்தை, சிங்கம், கரடி, காண்டாமிருகம் போன்ற கொடிய மிருகங்களான ஐவகை மிருகங்களுடன் அன்போடு பழகிய ஒரு முனிவரின் கதையை மற்றவர்களுக்கு பீஷ்மர் எடுத்துச்சொன்னார்.

முனிவர் ஒருவர், பயந்த நாயைக் காப்பாற்ற எண்ணி



ஸ்ரீமீனாட்சி அம்மன் கோயில் - மதுரை.

சிறுத்தை, புலி, யானை, சிங்கம், சரபம் போன்ற ஐவகையாக மாறி "நாயின்" பயத்தைப் போக்கினார் என்ற கதையையும் பீஷ்மர் கூறினார்.

ஒழுக்கம், நேர்மை, கல்வியறிவு, கருணை, உறுதி ஆகிய ஐந்தும் ஒரு மந்திரிக்கு இருக்கவேண்டியது என்றும் பீஷ்மர் சுட்டிக் காட்டுகிறார்.

கொடுப்பதால், இன்சொல்லால், வெற்றியால், தவத்தால், ஆசையால் - ஆகிய ஐந்து விதச் செயல்களால் ஒருவருக்கு ஒருவர் பிரியம் ஏற்படும் என்பது பீஷ்மர் காட்டும் வழியாகும்.

பெண் - பொருள் - வாக்கு - பிறவி - குற்றம் என்ற ஐந்து காரணத்தால்தான் பகைமை ஏற்படுகிறது என்பது பீஷ்மர் சொல்லும் கருத்தாகும்.

கழுகைப் போல் பார்வை, கொக்கைப் போல் நீடித்த இருப்பு, நாயைப் போல எச்சரிக்கை, சிங்கத்தைப் போல பயமற்ற ஆற்றல், காக்கையைப் போல பிறர் இங்கிதத்தைத் தெரிந்து கொள்ளுதல் போன்றே ஐவகை உபாயம் அரசாள்பவருக்குத் தெரிய வேண்டும்.

உலகில் தோன்றிய முதல் கத்தியை சிவபெருமான் திருமாலிடம் கொடுக்க, அவர் மரீசியிடம் கொடுக்க, அவர் மகரிஷியிடம் கொடுக்க, மகரிஷிகள் இந்திரனிடம் கொடுக்க, இந்திரன் இறுதியாக கிருபரிடம் கொடுக்கிறார். இப்படியாக ஐந்து நிலைகளில் முதல் கத்தி வந்து சேர்ந்தது.

"மாகிஷ்மதி" நகரில் ஆட்சி புரிந்து வந்த "தசாஸ்வன்" தானம், தவம், கல்வி, சத்யம், வில்பயிற்சி ஆகிய ஐந்தில் சிறப்புற்று விளங்கினான். இவனைப் போல அரசர்கள் வாழவேண்டும் என்பது பீஷ்மரின் பெருவிருப்பம்.

(இதில்ஒரு சூட்சுமம் என்னவென்றால், இந்த அரசனுக்கு "துரியோதனன்" என்ற பெயருடைய குமாரன் இருந்தான். இந்தக் குமாரனைப் போல் அன்புள்ளம் கொண்டவர்களை உலகில் காணமுடியாது என்பதாகும்.)

வித்திலிருந்து முளை உண்டாகி, முளையிலிருநது இலை உண்டாகி, இலையிலிருந்து காம்பு உண்டாகி, காம்பிலிருந்து மலர் உண்டாகி, மலரிலிருந்து கனி உண்டாகிறது என்ற ஐவகை உற்பத்தி தொடக்கத்தைப் பற்றியும் பீஷ்மர கூறுகின்றார்.

பண்டங்களைப் பேணி வைத்துக் கொள்ளாதவள், ஆராய்ந்து செய்யாதவள், கணவனுக்கு எப்போதும் விரோதமாகப் பேசுபவள், நாணயமற்றவள், பிறர் வீட்டை விரும்புவள் ஆகிய ஐந்து குணங்களைப் பெற்ற பெண்களை லட்சுமி அடையமாட்டாள் என்பதையும் எடுத்துக்காட்டுகின்றார்.

ஆடைகள், அணிகலன்கள், இரத்தினங்கள், விலங்குகள், தான்யங்கள் போன்ற ஐந்தும் பூமிதானம் செய்யும் போது பெறும் பலன்களாகும்.

நமது இறைச்சி, கொழுப்பு, எலும்பு, இரத்தம், விந்து

ஆகிய ஐந்தும் பூமிதானத்தைப் பெறும் போது கிடைக்கும் என்பதையும் பீஷ்மர் உணர்த்துகிருர்.

த்காத நாட்களில் வேதத்தை ஓதுபவன், துறவியாக இருந்தும் பெண்ணுசை கொண்டவன், அடைக்கலம் புகுந்தவனைக் கொன்றவன், பெற்ற பெண்ணை அண்டிப்பிழைப்பவன், லோபியிடம் பணத்தை விரும்புவன் ஆகிய ஐந்து வித கதியை திருடியவர்கள் அடைவார்கள் என்பதையும் காட்டுகிருர்.

திருமாலை வணங்காமல் மற்ற தெய்வங்களை வணங்குபவன், அடைக்கலம் வைத்த பொருளை அபகரித்தவன், பொய் சாட்சி சொன்னவன், பகலில் மாதரோடு புணர்ந்தவன், பயனற்ற தானம் செய்தவன் ஆகிய ஐந்து கொடிய பாவம் செய்தவன் பலனை அனுபவிப்பாய் என்று கசியபர் சபித்தார்.

அறத்தினின்று தவறியவன், மாதருக்குத் தீங்கு செய்தவன், ஆசிரியரை கீழே உட்கார வைத்து வேதங்களை ஓதுபவன், அவிந்த நெருப்பில் ஓமம் செய்தவன், பசுக்களை கொன்றவன் ஆகிய ஐந்து வித பாவச் செயல்களை செய்தவன் கதியை அடைவான் என்ற சாபத்தை பாரத்வாஜர் சபித்தார்.

நீர்நிலைகளில் மலம் கழிப்பவன், துரோகம் செய்தவன், பகைத்துக் கொள்புவன், மனைவியைக் கொண்டு வாழ்பவன், நண்பர்கள் அற்றவன் ஆகிய ஐந்துவித கதியை அடைந்தவர்களாகட்டும் என்ற சாபத்தை ஜமதக்கினி இடுகிருர்.

பெற்ருேர்களைக் காப்பாற்ருதவன், அதிகப் பிள்ளைகளைப் பெற்று ஏழையாக வருந்துபவன், அசுத்தன், வஞ்சகத்தோடு பழகுவன், அகந்தையுள்ளவன் ஆகிய ஐந்து பேர்களின் கதியை அடைவார்கள் என்று விசுவாமித்திரர் சாபம் இடுகிருர்.

மாமியாரை அவமதிப்பவள், கணவனை வெறுப்பவள், இனியவற்றைத் தனித்து உண்பவள், சக்தியற்றப் பிள்ளைகளைப் பெற்றவள், துரோக சிந்தனையுடையவள் ஆகிய ஐந்து நிலைகளை அடையும் கதியை அடையட்டும் என்று அருந்ததி சாபம் இடுகிருள்.

ஓதின வேதங்களை விட்டவன், மூன்று அக்னிகளை விட்டு விட்டவன், சோமத்தை விற்றவன், கோத்ரம் அறிந்து பெண்ணை எடுத்தவன், (ஒரே கோத்ரத்தில் பெண் எடுத்தவன்) பெண்ணைக் காப்பாற்ருதவன் ஆகிய ஐந்துவித பாபங்களைச் செய்தவர் கதியை அடையட்டும் என்று கௌதமர் சாபம் இடுகிருர்.

சூரியனை - உதய நேரம், அஸ்த்தமன நேரம், நண்பகல் நேரம், கிரகணம் பிடித்த நேரம், நீரில் தெரியும் நேரம் ஆகிய ஐந்து நேரங்களைப் பார்க்கக்கூடாது என்று பீஷ்மர் எடுத்துரைக்கின்ருர்.

அரசனானவன் கிழவன், கர்ப்பிணி, சுமைதாங்கி வருபவன், மெலிந்தவன் பசு ஆகிய ஐவருக்கும் முதலில் வழிகாட்டவேண்டும் என்று எடுத்துக் காட்டுகிருர்.

அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தி, அஷ்டமி, துவாதசி ஆகிய ஐந்து திதிகளில் பிரம்மச்சர்ய விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்பது பாரதத்தின் கருத்து.

தான் பிறந்த ஐந்தாவது நட்சத்திரத்தில் எண்ணை ஸ்நானம் செய்து கொள்ளக்கூடாது என்று எடுத்துக்காட்டுவது பாரதம்.

பிறந்த தினம், பிறந்த நட்சத்திரம், பிறந்த கிழமை, புரட்டாசி, கார்த்திகை நட்சத்திரங்கள் போன்ற ஐந்து நாட்களில் எண்ணை ஸ்நானம் செய்து கொள்ளக்கூடாது.

மாதவிலக்கு ஆகி ஐந்தாம் நாளில் பெண்ணுடன் சேரலாம் என்று பாரதம் எடுத்துக் காட்டுகிறது.

அங்கஹீனர்கள், கல்வியறிவில்லாதவர்கள், பெரியவர்கள், ஏழைகள், சத்யம் தவறியவர்கள் போன்ற ஐவரையும் எப்போதும் இகழ்தல்கூடாது.

வயோதிகர், கணவனில்லாத சகோதரி, ஆசிரியர், பண்டிதர், நண்பர்கள் ஆகிய ஐந்து பேர்கள் ஏழையாக இருந்தாலும் நாம் அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுவது மகா பாரதம்.

இரவில் அதிகம் சாப்பிடக்கூடாது. சாப்பிட்டவுடன் வெளி

யில் சுற்றக்கூடாது. சாப்பிட்டவுடன் பெண்களுடன் சேரக்கூடாது, சாப்பிட்டவுடன் ஓடலாகாது, சாப்பிட்டவுடன் வேலை செய்யக்கூடாது என்பது மாபாரதத்தின் கருத்து.

அறிமுகமில்லாத பெண்ணுடன் பேசக்கூடாது, கர்பிணிகளிடம் சேரலாகாது, வீட்டு விலக்கான பெண்களுடன் சேரலாகாது, தமக்கு மனைவியாக வரப்போகும் பெண்ணிடம் முன்பாகவே பேசி விடக்கூடாது, தனக்குச் சமமான வயதுடைய பெண்ணிடம் சேரக்கூடாது என்ற ஐந்து வித செய்கைகளையும் எடுத்துக் காட்டுவது பாரதம். ஆகும்.

ஈரக்கால்களுடன் சாப்பிட வேண்டும், ஈரக்கால்களுடன் படுக்கக்கூடாது, பந்தியில் எல்லோருடனும் சேர்ந்து மெதுவாகச் சாப்பிடவேண்டும், தூங்கும் போது உடுத்திக் கொண்ட ஆடையோடு பூஜை செய்யக்கூடாது, குறிப்பிட்ட வேளைகளில் சாப்பிடவேண்டும் ஆகிய ஐந்தும் முக்கியம் என்று காட்டுவதும் பாரதம்.

முக்கிய சாலைகள், பசுக்கள் இருக்கும் இடம், நெல்வயல்கள், நீர்நிலைகள் மற்றும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டும் மலஜலம் கழிக்கக்கூடாது என்ற ஐந்துவித செயல்களைக் காட்டுவதும் மாபாரதமே.

இமயமலைச் சாரல் வழியாகப் போய்க் கொண்டிருந்த ஐவர் பின்னால் ஓர் நாயும், திரௌபதியும் போய் கொண்டிருந்தார்கள் என்ற காட்சியையும் எடுத்துக் காட்டுவது மகாபாரதம் தான்.



முகப்பு கல்வளைவ - வரங்கல் காகதீய நாட்டு சிற்ப வேலைப்பாடு

இறுதியாக - சொற்சுத்தம், மனச்சுத்தம், புலன் அடக்கம், மனஅடக்கம், ஈகை ஆகிய ஐந்தும் மனிதனைக் காப்பாற்றும் என்று உறுதியாகக் கூறுவதும் மகாபாரதமே.

'வைகுண்டம்''செல்லநினைக்கும் "பரந்தாமன்" ஒரு மரத்தின் மேல் அமர்ந்து கொண்டான்.

இச்சமயம் பார்த்து "உலூபதன்" என்ற வேடனும் வந்து சேர்ந்தான்.

மாதவனை பறவையாகக் கண்டான் - மதிமயங்கி வில்லும் தொடுத்தான் வந்த அம்பை தன் திருவடிகளில் தாங்கி "வைகுண்டம்" சென்றான் கிருஷ்ணன். மகாபாரதம் ஐந்தில் தொடங்கி ஐந்து எழுத்துக்கொண்ட "உலூபதன்" மூலம் முடிவானதும் ஒரு மாபெரும் சிருஷ்டியேயாகும்.



# ஸங்கடஹர சதுர்த்தி

டாக்டர் டி.ஜி. அனந்தசுப்பிரமணியன்-புதுவை.

சதுர்த்தி என்ற திதியைச் சொன்னால் விநாயகசதுர்த்தி தான் நினைவிற்கு வரும். ஒவ்வொரு மாதத்திலும் சுக்ல, கிருஷ்ண என்று பக்ஷங்களில் (15 நாட்கள் கொண்டது) சதுர்த்தி திதி வருகின்றன. ஆனால் பாத்ரபத மாதத்தில் (ஆவணி) வரும் சுக்ல பக்ஷ திதியில்தான் விநாயக சதுர்த்தி என்று பூஜித்து வருகிறோம் விநாயகரை. ஆனால் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சுக்ல பக்ஷ சதுர்த்தியில் சிலர் பூஜிக்கிறார்கள். இவைகளில் ஸங்கட ஹர சதுர்த்தி என்று ஒரு திதியைக் குறிப்பிடுகிறார்கள். இது எந்த மாத திதியைக் குறிக்கும்?



ஸ்ரீசித்தி விநாயகர் - வெள்ளிக் காப்பு - கோவை வடக்கு.

பஞ்சாங்கத்தில் கூட ஸங்கட ஹரசதுர்த்தி என்று காணப்படுகிறது. மாசி மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் செவ்வாய்க்கிழமையில் வரும் சதுர்த்திக்கே ஸங்கட ஹரசதுர்த்தி என்று பெயராகும். இவ்விதம் சேர்ந்து வருவது மிகவும் துர்லபம். ஆகையால் பிரதிமாத சுக்லபக்ஷ சதுர்த்தியில் இதனை அனுஷ்டிக்கின்றனர் எனலாம். ஸங்கடங்கள் கஷ்டங்கள், நினைப்பது நினைவேறாதிருத்தல் முதலியவைகள். இவைகளைத் தீர்க்கும் விரதம் "ஸங்கட ஹர சதுர்த்தி" விரதம் என்ற பெயராகும். இந்நாளில் காலையில் ஸ்நாநம் செய்து நித்ய கர்மாக்களை முடித்துக்கொண்டு அன்று பகல் பூராவும் உபவாஸமிருந்து மாலையில் விநாயகரை பூஜித்து விட்டு சந்திரனைப் பார்த்த பிறகுதான் உண்ணவேண்டும். ஏதாவதொரு கொள்கை நிறைவேற அனுஷ்டிப்பதாகும். இதற்குச் சில புராணச்சான்றுகள் உள்ளன. அவைகளில் ஒன்று:

சகத்திரபுரி என்ற பட்டினத்தில் புண்ணிய சீலை என்ற மனைவியுடன் கூடிய சூரசேனன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவ்வரசன் ஒரு நாள் மந்திரிகள், புரோகிதர்கள் மற்ற பரிவாரங்களுடன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் போது ஆயிரம் சூரிய ஒளி விளங்க ஓர் சிம்மாசனம் அவனெதிரில் இறங்கியது. அதனைப்பார்த்த அரசன் ஒற்றர்களை அனுப்பித் தெரிந்து வரச்சொன்னான். அத்துடன் தானும் மந்திரிகளோடு சென்று

பார்த்தான். அந்த விமானத்தில் தேவேந்திரன் வீற்றிருப்பதைக் கண்டு மகிழ்ந்து ஆச்சர்யமடைந்து 'தாங்கள் எங்கள் நாட்டிற்கு வந்து அருள் கூறுவது நானும், எம்மக்களும் மிகவும் பெற்ற பெரும் பேருகும். தேவ! தாங்கள் இங்கே வந்த காரணம் யாது?' என்று வினவின்ான் அரசன். அதற்கு தேவந்திரன் "அரசே ஒரு சமயம் ப்ரூ சுண்டி என்ற முனிவர் (ப்ரூ என்றால் புருவம், சுண்ட என்றால் துதிக்கை. புருவத்தின் மத்தியில் துதிக்கையுடையவர் என்று பொருளாகும்.) விநாயகரைப் பூஜித்து அதே உடலுடன் 'கணேச சாரூப்யத்தை அடைந்தார் என்று நாரதர் என்னிடம் கூறினார். அதைக்கேட்ட நான் அம்முனிவரை தெரிசித்துப் போகலாமென ஆகாய மார்க்கமாக வரும் பொழுது இவ்விமானம் இங்கே இறங்கிவிட்டது. இதற்கு என்ன காரணமென்று வினவ, இந்நகரில் பல பாவங்களைச் செய்தவன் தொழுநோயினால் பீடிக்கப்பட்டு இந்நகரில் உள்ளான். அதனால் தான் விமானம் இறங்கிவிட்டது. இவ் விமானம் இதைவிட்டுப் புறப்படவேண்டுமென்றால், இந்நகரில் ஒருவன் ஸங்கட ஹர சதுர்த்தி விரதம் அனுஷ்டிக்கிறான். அவன் இவ்விமானத்தைப் பார்த்தால் இவ்விமானம் பூமியை விட்டெழும்பி ஆகாயத்திற்குச் செல்லும்" என்று சொன்னான். இவையனைத்தையும் கேட்ட சூரசேன மகாராஜன் 'ஓ அமரேசனே! தாங்கள் சென்று வணங்கத்தக்க அந்த ப்ரூ சுண்டி என்பவர் யார்



என்ன குலத்தவர், அவர் செய்த தவங்கள் யாவை? அவைகளையெல்லாம் எனக்குத் தெரிவிக்கக் கோருகிறேன்' என்று வினவ, அதற்குத் தேவேந்திரன் சொன்னான்; அரசனே! தண்டகவனத்திலே நந்துரமென்னும் பழமையானதும், லக்ஷ்மி கடாக்ஷம் பொருந்தியதுமான ஒரு நகரமிருக்கிறது. அந்நகரத்தின் ஸமீபத்தில் ஒரு வேடச்சேரி உண்டு. அந்தச்சேரியில் மிக பயங்கரமான கொடுஞ்செய்கைகளையுடைய விப்ரதன் என்னும் ஒரு வேடன் இருந்தான். அவ்வேடன் எக்காலத்திலும் எவ்விடத்திலும் சென்று வழிப்போக்கர்களையெல்லாம் ஒருவரையும் தப்பவிடாமல் மறித்து பொருள் பறித்து வாழ்க்கையை நடத்திவந்தான். அவ்விதமிருக்க ஒரு நாள் ஓர் அந்தணன் அவ்வழியே வந்தான். அவனைப் பார்த்த வேடன் இன்று நமக்கு நற்காலம் என்றெண்ணி அவ்வந்தணனைப் பின்தொடர்ந்தான். அவ்வந்தணன் வேடனைப் பார்த்துவிட்டு நமக்கு இறுதிநாள் இன்று போலும் என்றெண்ணி ஓட அவ்வேடனும் அவனோடு ஓடிக் களைப்புற்று ஓடமுடியாமல் திரும்பி வருகையில் ஓர் குளக்கரையில் விநாயகர் இருப்பதைக் கண்டு அக்குளத்தில் ஸநானம் செய்து தாகம் தணியுமாறு தண்ணீரைக் குடித்து களைப்பைப் போக்கிக்கொள்ள

# திருமலைத் தெய்வம்

மலைகள் ஏழின்பின் மறைந்துள தெய்வம்
மார்பிலே லக்ஷ்மியை மறைத்துள தெய்வம்
கலைதிகழ் வேதமாம் மறை புகழ் தெய்வம்
காண்பவர்க்கருள்செயும் கருணையின் தெய்வம்

அம்மையைக் கீழ்வைத்தே தனித்துள தெய்வம்
அன்பரின் கவலைகள் தணித்துள தெய்வம்
இம்மையின் நலத்தைதான் ஈந்திடும் தெய்வம்
ஈச்வரப் பெயர்கொளும் வைணவத் தெய்வம்

வட்டியுடன் பணம் வாங்கும் வாணிபத் தெய்வம்
வந்தனை செய்வோருக்கே வான்நிகர் தெய்வம்
எட்டியிருந்தழைக்கும் வானுயர் தெய்வம்
எம்மதத்தோர் பணியும் மானுயர் தெய்வம்

ஏழுமலைத் தெய்வம் நம் இதயம்வாழ் தெய்வம்
ஏங்கும் மனிதமனம் தாங்கியருள் தெய்வம்
சூழுலகக் கவலைகளை வாங்கியருள் தெய்வம்
சுந்தரப் பேருருளே தேங்கி ஒளிர் தெய்வம்

உயிர் ஈந்தே மயிர் வாங்கும் உன்னதத் தெய்வம்
உலகெங்கும் அருள்சிந்தும் ஓங்காரத் தெய்வம்
பயிர் வாழ மழைபெய்யும் பாங்குடைத் தெய்வம்
பணமழை காலடியில் பெய்விக்கும் தெய்வம்

பாலாஜி தெய்வம் அருள் பாலிக்கும் தெய்வம்
பத்மாவதித் தாயின் பாகம் பெறும் தெய்வம்
நாலாறு மொழி பேசும் நாட்டினர் எல்லாம்
நாடிவரவே மலையில் நின்றருள் தெய்வம்

முகமெலாம் நாமமாய் மூடியிருந் தாலும்
முழுக்கருணை விழிவீசும் மோஹனத் தெய்வம்
அகமெலாம் கனிந்து ஹரிகோவிந்தா என்றால்
அப்போதே ஓடி அருள் ஸொலப்ய தெய்வம்

சங்கோடு சக்கரமே ஏந்தி யிருந்தாலும்
சிங்கத்தை முன்வைத்த சக்தி மிகும் தெய்வம்
மங்காத புகழினிலே மாவிஷ்ணு எனினும்
மறை கண்ட பரதெய்வம் மாமலைத்தெய்வம்.

திரு. டி.ஆர். குருஸ்வாமி - சென்னை.

அங்குள்ள மரத்தினடியில் படுத்துக்கொண்டான். இவ்வாறு இருக்கையில் தவச்சிரேஷ்டராகிய முக்களமுனிவர் அவ்வழியே வந்தார். அவரைக் கண்டவுடனேயே வேடன் வாளையுருவி அவரைக்கொல்ல நினைத்தான். உடனே முக்களமுனிவர் அவனைத் திரும்பிப் பார்த்தார். அவ்வண்ணமே வேடனுடைய வாளும் அவனுடைய அறியாமையும், அவன் செய்த பாபங்கள் எல்லாம் அவனை விட்டு விலகி அவனுக்கு மெய்யறிவு உண்டாயிற்று. உடனே அவன் முக்கள முனிவரைப் பார்த்து, அடியேன் செய்து கொள்ளும் விண்ணப்பத்திற்குச்செவிசாய்த்தருள வேண்டும் என்று வேண்டினான். "தவச் செல்வரே! இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்ததாலும் தங்களைத் தெரிசித்ததாலும் என்னுடைய எல்லாவித பாபங்கள் தொலைந்து நான் ஓர் புனித ஜன்மம் எடுத்தவனாக உள்ளேன். ஆகையால் நான் நற்கதி பெற எனக்கு அருள வேண்டும்' என்றான். முனிவரோ கொஞ்சமும் யோசிக்காமல் அவ்வேடனுக்கு மகா கணபதி மந்திரத்தை உபதேசிக்க எண்ணி 'நீ சென்று குளத்தில் ஸ்நாநம் செய்து வா' என்று கூறினார்.

அவ்வார்த்தையைக் கேட்டு விப்ரதன் ஸ்நாநம் செய்து வந்தான். பிறகு முக்கள முனிவர் அவன் சிரத்தின் மீது தமது கரத்தை வைத்து "ஓம் கணேசாய நம:" என்ற மந்திரத்தை உபதேசித்தார். மேலும், அவனெதிரில் ஒரு தடியை நட்டு

"அனப! இத்தடிக்குத் தினந் தோறும் காலந்தவருமல் தண்ணீர் ஊற்றிக் கொண்டு அது துளிர்க்கின்ற வரை நானுபதேசித்த மந்திரத்தை ஜபித்து வா! நாட்கள் கழித்து இங்கே வருகிறேன்" என்று சொல்லிச் சென்ருர். விப்ரதன் முனிவர் கூறியபடி தினமும் விநாயகமூர்த்தியை மனத்தில் தியானித்து அத்தண்டத்திற்குத் தண்ணீர் ஊற்றி வருங்கால் அத் தண்டமானது பூக்க ஆரம்பித்தது. அச்சமயத்தில் முக்கள முனிவர் அங்குத் தோன்றி தன் கமண்டலத்திலுள்ள நீரை மந்திரித்து விப்ரதன் மீது தெளித்தார். உடனே அவன் பல பிறவிகளில் செய்த பாவங்கள் நீங்கி மந்திரஜல மகிமையால் அவனுடைய புருவ மத்தியில் துதிக்கையுண்டாகி விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தையடைந்தான். முனிவர் அவனைத் தழுவி 'இவ்வுருவத்தோடு கல்ப காலம் வரையில் வாழக்கடவாய். இந்த மரம் கல்ப விருக்ஷமாக எல்லோருக்கும் எல்லாவற்றையும் கொடுத்துவரட்டும்' என்று கூறினார்.

அவரது புருவத்தின் நடுவில் துதிக்கைபோன்ற வடிமொன்று ஏற்பட்டது. அதனால் அவருடைய பெயர் "ப்ருசுண்டி" என்று ஆயிற்று. தினந்தோறும் கணேசமூர்த்தியை வழிபட்டு வந்தார். கணேசமூர்த்தி ப்ரத்யக்ஷமாகி அருளினார்.

உடனே ப்ருசுண்டி முனிவர் ஸ்ரீகணேசமூர்த்தியை வணங்கி நின்ருர். 'அப்பனே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் தருகிறேன்' என்ருர் விநாயகர். அதற்கு ப்ருசுண்டி முனிவர் 'தேவ! ஒருவருக்கும் கிடைக்காத உன்னுடைய தரிசனமும், உன்னைப் போன்ற உருவமும் கிடைத்த பிறகு வேறென்ன வேண்டும். உன் திருமலரடிகளையே வேண்டுகிறேன்' என்ருர். அப்படியே அருளினேன் என்ருர் விநாயகர். ப்ருசுண்டி ஜீவன் முக்தரானார்.



பன்னாரி மாரியம்மன் கோயில்

ஒரு சமயம் நாரதர் யமலோகத்திற்குச்சென்ருர். அங்கே யமதர்மராஜன் அவரை உபசரித்து இருபத்தெட்டு கோடி நரகத்தைச் சுற்றிக்காண்பித்து அவைகளில் வீழ்ந்து துன்பப்படுபவர்களையும் காண்பித்தான். ஒரு பக்கத்தில் கும்பீ பாகமென்னும் நரகத்தில் தவசிரேஷ்டரான ப்ருசுண்டி முனிவரின் உறவினர்கள் வீழ்ந்து உழலுவதைப்பார்த்தார் நாரதர். பிறகு யமதர்மராஜனிடம் விடைபெற்று விரைவாக ப்ருசுண்டியிடத்திற்கு வந்து, 'ஓ! சர்வ சித்திப் பெற்றவரே! நீர் விநாயகக் கடவுளுடைய பெருங்கருணையினாலே அவர் சாருபத்தைப் பெற்று இங்ஙன மிருக்க உம்முடைய சுற்றத்தாரெல்லாம் யமலோகத்தில் கும்பீபாகமென்னும் நரகத்தில் வீழ்ந்து வருந்துகிருர்கள். ஆதலால் அவர்களை நற்கதியிற் சேர்ப்பிக்க வேண்டிய முயற்சிகளைச் செய்யும்' என்று கூறி ஆகாயமார்க்கமாகச் சென்றுவிட்டார்.

அதன் பிறகு ப்ருசுண்டி மனம் வருந்தி இதுகாறும் இதை அறியோமே! என்றெண்ணி சிறிது நேரம் தியானத்திலிருந்து நரகத்தில் வீழ்ந்து உழலுகின்ற சுற்றத்தினரைக்குறித்து வேதாகம முறைப்படி சங்கடஹர சதுர்த்தி விரதத்தை அனுஷ்டித்து விநாயகரை வழிபட்டார். உடனே சுற்றத்தார் எல்லோரும் நரகத்திலிருந்து விடுபட்டு தேவலோகம் அடைந்தனர். இத்தகைய விரதத்தை எல்லோரும் அனுஷ்டித்தால் அவரவர் குறைகள் நீங்கி நற்பயன் அடைவார்கள்.'

இந்தப் பெருமையைப் பற்றி இந்திரன் அரசனுக்குக் கூறினான்.

* * * *

# சாபமே சன்மானமாக மாறியதெப்படி?

திரு. சோ. ரங்கசுவாமி - நாட்டரசன்கோட்டை.

உலகத்தை உய்விக்கும் சூரிய தேவன், விஸ்வகர்மாவின் மகள் சமிக்ஞை என்ற நங்கையை மணந்து கொள்கிறார். இல்லறம் நல்லறமாக இருந்து வருகிறது. 'யமன்' என்ற மகனையும், 'யமுனை' என்ற மகளையும் தம்பதிகள் பெற்றெடுத்தனர். வெண்கதிரோன் சூரிய பகவான் வெப்ப மிகுதியானவன் அல்லவா? சமிக்ஞையால் வெப்பத்தைத்தாங்க முடியவில்லை. இதனால் கணவனைப் பிரிந்து வாழமுடிவு செய்தாள். தனக்குப் பதிலாகத் தனது சாயையை (நிழலை) உயிர்ப்பித்து சூரியனோடு வாழும்படிப் பணிக்கிறாள். தனது குழந்தைகளான யமனையும், யமுனையையும் சொந்தக் குழந்தையாக பாவித்து பார்த்துக்கொள்ளுமாறு சாயாவிடம் சொல்லிவிட்டு விலகிக் கொள்கிறாள். சாயாவும் அதே போல் நடந்து சூரியனுடன் இணைந்து வாழ்ந்து வந்தாள்.

நாட்கள் பல கடந்தன. சாயாவுக்கு இப்போது 'சனி' என்ற மகனும் 'சலா' என்ற மகளும் பிறக்கிறார்கள். தன் சொந்தக் குழந்தையைப் பார்த்ததும் சாயாவின் குணம் மாறி விடுகிறது. தன் பிள்ளைகளின் மேல் அதிக பாசம் செலுத்துவதுடன் வளர்ப்புப் பிள்ளைகளைக் கொடுமைப் படுத்தி வந்தாள். யமன் ஆண் பிள்ளையாதலால் சாயாவின் கொடுமை அவனுக்கு அதிகம் சிரமம் இல்லாமல் போய்விடுகிறது. ஆனால் யமனின் தங்கை யமுனைதான் படாதபாடு படுகிறாள்.

தங்கை கொடுமைப்படுத்தப் படுவதைக் கண்டு யமன் பொறுக்க முடியாமல் சாயையை எதிர்க்கிறான். அவ்வளவுதான் சாயைக்கு கோபம் வந்து விடுகிறது. தன் வளர்ப்புப் பிள்ளை என்று கூட பாராமல் பிரேதங்களால் சூழப்பட்டுக் கிடக்குமாறு சபிக்கிறாள். பாவிகள் குளிக்கும் நதியாக போகுமாறு யமுனையை சபித்து விடுகிறாள்.

விபரம் சூரிய தேவனின் பார்வைக்குப் போகிறது. தமது ஞான திருஷ்டியால் நடந்ததையெல்லாம் புரிந்து கொள்கிறார். நியாயத்திற்காகப் போராடிய யமனைத் தருமராஜனாக, உயிர்களை அவற்றின் உடல்களிலிருந்து மீட்டுவரும் பணிக்கு அதிபதியாக, சாயாவின் சாபத்தை திருத்தியமைக்கிறார். பாபிகளின் பாபத்தை போக்கும் புண்ணியநதியாக திகழ்ந்து புகழ்பெறுமாறு யமுனைக்கு ஆசிகூறுகிறார்.

நியாயத்திற்காகப் போராடிய தியாகச்செம்மலுக்கு சாபம் கிடைப்பது நியாயமாகுமா? தர்மத்திற்கு இது அடுக்குமா? அதனால்தான் சாபமே ஓர் வெகுமதியாக யமனுக்கு தர்மராஜாவாக மாற்றியது. சகோதரியை பாரோர் போற்றும் புண்ணியநதியாக திகழச்செய்தது. இதனால் மானிடர்கள் வினையின் பயனை அனுபவித்து அத்தளையிலிருந்து விடுவிக்க யமன் ஒரு கருவியாக இருந்து, ஆன்மாக்களை உய்விக்கும் வடிகாலாகத் திகழ்கிறார்.

ஆதிசங்கரரும் தமது அருள் மொழியில் "ஆன்மாக்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பது போல் 'மன்மதன்' தெரிந்தாலும், பந்தபாசத்தில் அமுக்கி, பிறவிச்சூழலில் உட்படுத்தி உண்மையில் கெடுதலே செய்கிறான். ஆன்மாக்களுக்குக் கெடுதல் செய்வதுபோல் யமன் இருந்து வந்தாலும் உண்மையில் ஆன்மாக்களுக்கு முக்தி வழி கிடைக்க சாதகமாக இருந்து வருகிறார்" என கூறுகிறார். யமுனை, 'யமுனா நதி' என்ற புண்ணியநதியாக திகழ்ந்து ஜீவர்களின் பாப மாசுகளை நீக்கி பாபவிமோசனம் தருகிறாள். அவர்களின் சாபம் அவர்களுக்கு சன்மானமாக, வெகுமதியாக இருப்பதுடன், மானிடர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமைகிறது.

இனி சாபவிமோசனத்தால் ஏற்பட்ட வரப்பிரசாதத்தை, நமக்குக் கிடைத்த சன்மானத்தை நோக்குவோம்.

ஸ்ரீ வைகுந்தத்தில் மகா விஷ்ணு தன் பத்தினியுடன் தனிமையில் இருக்கிறார். வாசலில் ஜய, விஜயர் என்ற இரண்டு வாயிற் காப்போர் வைகுந்த வாசலை காவல் புரிகிறார்கள். அப்போது ஜனகாதி முனிவர்கள் பெருமாளை சேவிக்க வந்து சேருகிறார்கள். முற்றும் துறந்த முனிவர் என்பதால் ஆடை அலங்காரம் இல்லாமல் ஆண்டியாக கௌபீனம் மட்டும் அணிந்து முனிவர்கள் வந்திருக்கிறார்கள். ஆடை பாதி, ஆள்பாதி என்பார்கள் அல்லவா! இந்த ஆண்டிக்கோலத்தை பார்த்தவுடனேயே ஜெய, விஜய வாயிற் காவலர்களுக்கு முனிவர்களை உள்ளே செல்ல அனுமதி கொடுக்க மனம் வரவில்லை. பெருமாள் தனிமையில் இருக்கிறார். ஆண்டிக்கோலத்துடன் உள்ளே செல்ல அனுமதியில்லை என்று மந்திரபலம் மிக்க ஜனகாதி முனிவர்களைத் தடுத்துவிடுவதுடன், பரிகாசமும் செய்தனர்.

கோபமே வராத ஜனகாதி முனிவர்களுக்கு அப்போது கோபம் வந்துவிட்டது. "பிடி சாபம்! ஆணவமும், அகம்பாவமும் கொண்ட நீங்கள் வைகுண்டத்தில் இருக்க தகுதியற்றவர்கள். நீங்கள் இருவரும் வைகுந்தத்தை விட்டு பூலோகம் சென்று பிறக்கக்கடவது" என்று சாபம் இடுகிறார்கள். சாபத்தின் வலிமை வைகுந்தத்தை குலுக்கியது. பிராட்டியாருடன் பெருமாள் ஜனகாதி முனிவர்களுக்கு காட்சி அளித்து அவர்களை சாந்தப்படுத்துகிறார்.

ஜய, விஜயர்கள் தாங்கள் செய்த தவறுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். தங்களுக்கு சாப விமோசனம் அளிக்கும்படி பிரார்த்திக்கின்றனர்.

"பல பிறவிகள் எடுத்து வைகுந்த வாசனுக்கு பக்தனாக இருந்து இறுதியில் வைகுந்தம் வந்தடைகிறீர்களா! அல்லது வைகுந்த வாசனான மகாவிஷ்ணுவுடன் தீராப்பகை கொண்டு அரக்க குணத்துடன் மூன்று பிறவி எடுத்து இறுதியில் விஷ்ணுவினாலேயே அழிக்கபட்டு வைகுந்தம் வந்தடைகிறீர்களா?" என்ற வினாவை எழுப்பினார்கள் சனகாதி முனிவர்கள். ஜெய, விஜயர்கள் பெருமாளுக்கு பகைவனாக இருந்து அபகீர்த்தி அடைந்தாலும் மூன்றே பிறவியில் வைகுந்தம் அடைந்துவிடுவதாலும், இறைவனாலேயே அழிக்கப்படுவதாலும் அந்த சாபவிமோசனத்தையே விரும்பிக் கேட்டுப் பெற்று சென்றனர். "இரண்யாட்சன் - இரண்ய கசிபு, ராவணன் - கும்பகர்ணன், கம்சன் - சிசுபாலன்" இப்படியாக இறைவனுக்குப் பகைவர்களாக இருந்து இறுதியில் இறைவனாலேயே அழிக்கப்பட்டு ஆட்கொள்ளப்படுகின்றனர்.

ஆழ்ந்து சிந்திக்கும் போது இதில் ஒரு சந்தேகம் மனத்தில் தென்படும். பக்தனாக, புண்ணியவானாக இருந்தால் வைகுந்தம் வந்தடைய பல பிறவிகள் காத்திருக்க வேண்டியுள்ளது. ஆனால் பாவியாக, இறைவனுக்குப் பகைவனாக, அரக்க குணத்தில் பொல்லாத குணத்துடன் பிறவி அமைந்தால் மூன்றே பிறவியில் வைகுந்தம் வந்தடையலாம்! இப்படியொரு சாபவிமோசனம் என்றால்? இதில் என்ன நியாயம் இருக்கிறது என்று எண்ணத்தோன்றும்.

'அபகீர்த்தியை எங்களால் பொறுக்கமுடியாது. எனவே, பலபிறவி எடுத்தாலும் விஷ்ணு பக்தனாகவே இருந்து வைகுந்தம் வந்தடைகிறோம்!' என்று சாபவிமோசனம் கேட்டிருந்தால், அவர்களின் பிறப்பு, பக்தியின் சிறப்பு "பக்த விஜயம்" என்ற அருளாளர் பட்டியலில் இடம் பெற்று, பட்டியல் நீண்டிருக்கும்! அவ்வளவு தான். ஆனால் ஜீவர்களுக்கு குறிப்பிடும்படியான எந்த பிரயோசனமும் ஏற்பட்டிருக்காது.

ஆனால் துஷ்டர்களாக மூன்று முறை பிறவி எடுத்ததன் விளைவு, பரப்பிரம்ம சொரூபமாக இருந்து எங்கும் வியாபித்து இருக்கும் மகா விஷ்ணு பூவுலகிற்கு இறங்கி வந்து அவதாரம் எடுத்து, லீலா விநோதங்கள் பலப்பல நடத்தி, துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து ஜீவாத்மாக்களுக்கு பேரருள் புரிந்தார். நித்ய சூரிகள் அனுபவித்து வந்த பேரானந்தப் 'பர, வியூஹ' பரம்பொருள், சாதாரண எளிய பாமர மக்களும் உணரும் வண்ணம் 'விபவ' சொரூபத்திற்கு கொண்டுவர காரணமாக இவர்கள் பெற்ற சாபவிமோசனம் ஓர் அங்கமாக இருக்கிறது. அவதார லீலா விநோதங்கள் "அர்ச்சை" சொரூபத்

(31-ஆம் பக்கம் பார்க்க)

# மேதகு நட்பு பூண்டோன்

திரு. வ. ஜோதி - புதுக்கோட்டை.

இறைவனின் கல்யாண குணங்களுள் ஒன்று சௌலப் பியம். அதற்கு ஓர் எடுத்துக் காட்டாய் அமைந்தது குசேல னின் வரலாறு. குசேலன் என்ற மாமுனிவன் கண்ணபெருமா னுடன் நட்பு பூண்டவன். அர சனாகவும், ஆண்டவனாகவும் இருந்த கண்ணபெருமான், ஒரு சாதாரண முனிவனுடன் நட்பு கொண்டு காட்டிய அன்பு மெய் சிலிர்க்க வைக்கின்றது.

நட்பு என்றால் என்ன? அது எப்படி இருக்க வேண்டும்? என்று உலக மக்களுக்குக் காட் டுகின்ற இலக்கணமாய் அமைந் தது அவர்கள் நட்பு. அவர்க ளின் இனிய நட்பினை ஸ்ரீமத் பாகவதம், பத்தாம் ஸ்கந் தம், எண்பது எண்பத்தொன் றும் அதிகாரங்களில் காண லாம். குசேலோபாக்கியானம் என்ற நூல் அதனை மிக வும் விரிவாகவும் விளக்கமாக வும் கூறுகின்றது.

கண்ணபெருமானும், குசேல னும் இளமைப் பருவத்தில் சாந் தீப முனிவரிடம் எல்லாக் கலைகளையும் ஒருங்கு இருந்து கற்றனர். பின்னர் அரசரா னான் கண்ணன். 'துவாரகை' என்னும் நகரில் வாழ்ந்து வந் தான். அந்நாட்டைச் செம்மை யுடன் ஆட்சி செய்து வந் தான். ஆனால் குசேலனோ அவந்தி நாட்டின் மலையொன் றில் இருந்த ஒரு சிறிய கிரா மத்தில் வசித்து வந்தான்.

குசேலன் மிகவும் வறுமையில்



வாழ்ந்து வந்தான். அவனின் உண்மையான பெயர் 'சுதாமா' என்பதாகும். அவன் மிகவும் கிழிந்த கந்தலான ஆடையையே எப்போதும் அணிந்திருந்ததால் அவனைக் குசேலன் என்றே அனைவரும் அழைத்து வந்தனர். குசேலன் என்ற சொல்லிற்குப் 'பொலிவற்ற ஆடையாளன்' என்பது பொருளாகும். அவனுடைய மனைவியின் பெயர் 'சுசீலை' என்பதாகும்.

குடும்பத்தில் மிகுந்த வறுமை நிலை இருந்தமையால் மனைவியின் வேண்டுகோளின்படித் தன் இளமைப்பருவத்து நண்பனான கண்ணபெருமானைக் காணக் குசேலன் துவாரகைக்குப் புறப்பட்டுச் சென்றான். போகும் போது கையுறையாக அன்புடன் கொடுக்க சிறிய அவல் மூட்டை ஒன்றையும் கையில் எடுத்துச் சென்றான். பலவிதமான இன்னல்களுக்கிடையில் வழிநடந்து துவாரகை அரண்மனையை அடைந்தான்.

கண்ணபெருமானைக் காண வேண்டும் என்பதற்காகப் பல நாட்டு மன்னர்கள் அந்நகர வாயிலில் காத்திருந்தனர். அவ்வாயில் காப்போரிடம் சென்று தன் பெயர் 'குசேலன்' என்றும், தான் கண்ணபிரானைக் காண வேண்டி வந்துள்ள செய்தியையும் கூறினான். அச்செய்தியைக் கேட்ட வாயில்காப்போர், கண்ணபெருமானிடன் சென்று "'குசேலன் என்ற மாமுனிவர் தங்களைக்காண வந்துள்ளார்" என்ற செய்தியைத் தெரிவித்தனர்.

இதனைக் கேட்டவுடன் கண்ணபெருமான் துள்ளி எழுந்தான். அளவற்ற அன்பு அவன் உள்ளத்தில் பொங்கியது. உடனே, 'அழைத்து வாருங்கள்' என்று கூறினான். இதனைத் துவார பாலகரான வாயில்காப்போர் குசேலரிடம் தெரிவித்தனர்.

தாயின் வருகையைக் கேட்ட தனித்த இளமை மிக்கக் குழந்தையைப் போன்று அன்பு மிகுதியும் உடையவன் ஆனான். கண்ணன் நெஞ்சில் ஆனந்தம் பொங்கியது. 'போய் அழைத்து வாருங்கள், போய் அழைத்து வாருங்கள், போய் அழைத்து வாருங்கள்' என்று மூன்று முறை விரைவாகச் சொன்னான்.

தாயது வருகை கேட்ட
தனியிளம் குழவி போன்று
நேயமிக் குடைய னாகி
நெஞ்சினில் உவகை பூப்ப
போயழைத் திடுமின் இன்னே!
போயழைத் திடுமின் இன்னே!
போயழைத் திடுமின் இன்னே!
எனவிரை பொருளிற் சொற்றான்
--குசேலா-416

இவ்வாறு கூறி அவனைப் பெருமானிடம் அழைதது்ச் செல்கின்றனர். பெருமானைக் குசேலன் காணுகின்றான். கண்டவுடன் மிக விரைந்து நடக்கின்றான். பெருமாளும் குசேலனைக் காணுகின்றான். உடனே தன் மலர்ப்படுக்கையில் இருந்து எழுந்து, பேரன்பு பொங்குகின்ற மனம் உடையவனாகி, குசேலன் முன்னர் ஓடிவந்து அவன் பாதங்களில் விழுந்து வணங்குகின்றான்.

என்ன ஆச்சரியம்! ஏழ்மையிலும் ஏழ்மையாளன் குசேலன். அரசர்க்கும் அரசன் கண்ணபெருமான். அத்தகையவன் ஓடி வந்து முனிவன் பாதங்களில் பணிந்தானாம். இது வல்லவோ நட்பு? இதைவிடச் சிறந்த நட்பு இருக்க முடியுமா? மேதகு நட்பு பூண்ட அவ்விருவரும் வாழ்க்கைக்கு எத்தகைய படிப்பினையை நல்குகின்றனர்?

காண்டலும் உவகை பூத்துக்
கால்விசை கொடு நடந்தான்
ஆண்தகை அவனும் கண்ணுற்று
அணைஉடைத்து எழுநீத்தம் போல்
நீண்டபூம் பள்ளி நீத்து
நிலவு பேரன்பு பொங்கப்
பூண்ட மாதவன்முன் சென்று
பொன்னடி வணங்கி னானால்
--குசேலோ-429

இவை மட்டுமா செய்தான்? நெற்றிப் பொட்டு மண்ணில் படியும்படி வணங்கிப்பின்னர் தன்னுடைய உடலோடு, அவன் உடல் பொருந்தும்படித் தழுவிக் கொண்டான். அழகிய ஆசனத்தில் குசேலனை இருத்தினான். திருமஞ்சன நீராட்டினான். புத்தாடை அணிவித்தான். உயர்ந்த உணவு வகைகளை நல்கினான். பின்னர் பொன்மயமான தன் பள்ளியில் எழுந்தருளச் செய்து பொற்சாமரம் வீசினான்.

"ஐயோ! வழிநடந்ததால் இவ்விரண்டு கால்களும், எவ்வளவு மெலிவடைந்தனவோ!" என்று கூறி அக்கால்களை மெல்ல வருடி விட்டான். பழைய நினைவுகளையெல்லாம் பேசினான். கண்ணபெருமானின் இச்செயல்களையெல்லாம்

கண்ட குசேலன் ஒன்றும் பேசத் தோன்றாமல் ,செயலற்று இருந்தான்.

அதுமட்டுமா? "நிலைபெற்ற உலகத்தில் உள்ள வேதங்களை யெல்லாம் அறிந்த மாமுனிவனே! உன்னைக் கண்டதால் என் உடலானது பூரிப்பு அடைந்துள்ளது. இப்பூமியில் உள்ள மன்னர்களும் தேவர்களும் நான் அடைந்துள்ள இப்பெறுதற்கும் அரிய பேற்றினைப் பெற்றவர் வேறு யார்? இனிப் பெறக்கூடியவர் வேறு யார்?" என்று கூறினான்.

"மன்னுடைய மறை யனைத்தும்
வகுத்துணர்ந்த மாதவனே!
உன்னுடைய தரிசனத்தால்
உடம்புபூரித் தனன் யான்
மின்னுடைய விளங்கொளிவேல்
வேந்தருளும் தேவருளும்
என்னுடைய பெறலரும் பேறு
யார்பெற்றார்? யார்பெறுவார்?
--குசேலா-442

இவை போன்று இன்னும் பலவற்றைப் பேசினான். நட்பிற்கே இலக்கணம் கூறத்தக்கது அவன் செய்கை. உயர்ந்தோர் நட்பு இத்தன்மை உடையதாய் உள்ளது. சிறப்புமிக்க இந்த நட்பானது நம்மைச்சிந்திக்க வைக்கின்றது.

ஒரு நாள் பழகினும் பெரியோர்
கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க்கும்மே!

என்ற பாடலின் கருத்துப் போல் இவர்களின் நட்பு அமைந்துள்ளது. இந்த நட்பின் உயர்ந்த தன்மையினை உணர்ந்து கொள்ள, இதே போன்று இளமையில் நட்பு பூண்ட வேறிருவர் நட்பையும் காண்போம். மகாபாரதத்தில் காணப்படும் அவர்களின் நிலையையும் அறிவோம்.

பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் ஆசிரியராய் இருந்தவர் துரோணர். இளமைப் பருவத்தில் துரோணரும், யாகசேனன் என்பவரும் 'அக்னிவேசன்' என்ற முனிவரிடம் ஒன்றாக இருந்துக் கல்வி கற்றனர். யாகசேனன் பாஞ்சால நாட்டு அரசனின் மகன். துரோணர் ஏழை அந்தணர் குலத்தில் தோன்றியவர். அவர்கள் இருவரும் எப்பொழுதும் பிரியாமல் நட்புடன் கல்வி கற்று வந்தனர்.

அப்போது அடிக்கடி யாகசேனன், "நான் என் நாட்டிற்கு மன்னனாகி விடுவேன். அப்போது என் நாட்டின் பாதியை உனக்குத் தருவேன்" என்று அடிக்கடிக் கூறிவந்தான். காலம் கடந்து வந்தது. யாகசேனன் பஞ்சால நாட்டின் மன்னனானான். துரோணர் சிலகாலம் தவம் இயற்றினார். பின்னர் கிருபரின் தங்கையை மணந்தார். அவர்களுக்கு ஆண் குழந்தையொன்று பிறந்தது. அக்குழந்தை பசுவின் பாலின்றியே ஐந்து வயது வரைக் காட்டில் வளர்ந்து வந்தது.

அக்குழந்தையின் பாலிற்காகப் பசு ஒன்று தேவை என்று துரோணர் எண்ணினார். எனவே தன்னுடைய இளமைக் கால நண்பனும், பாஞ்சால நாட்டு மன்னனுமாகிய யாகசேனனிடம் சென்றார். துரோணரைக் கண்டவுடன் யாகசேனன், "நீ யார்?" என்று முகம் அறியாதவன் போன்று கேட்டான். துரோணர், "நான் உன் நண்பன்" என்று பதில் கூறினார். உடனே யாகசேனன், "நானோ மன்னன்! நீயோ அந்தணன், எனக்கும் உனக்கும் என்ன நட்பு இருக்கின்றது?" என்று கூறிச் சிரித்துப் பரிகாசம் செய்தான்.

மன்னன் யான்;நீ முனிவன்!
மரபால் எனக்கும் உனக்கும்
என்ன நட்புஉண்டு என்ன,
ஏசிநகை செய்து இகழ்ந்தான்
அன்ன துருபன் தன்னை
அவையில் அரசர் கேட்கச்
சொன்ன வாய்மை நீயே
சோர்ந்தாய்; யானோ சோரேன்!
-மகாபாரதம்-
ஆதிபருவம்-வாரணு-44

உடனே துரோணர், "முன்னர் கூறியவற்றை மாற்றி விட்டாய். வாய்மை தவறிவிட்டாய். நீ சொன்னபடி உன் நாட்டின் பாதியைக் கைக்கொள்வேன். அத்துடன் போரில் உன்னைத் தேர்க்காலுடன் கட்டிக் கைக்கொள்வேன். இது உறுதி" என்று கூறிச் சபதம் செய்தார்.

'புகன்றபடி நீயாளும் புவியும்
பாதி கொளவேன்
இகன்ற சமரில் உன்னை
இரதத்துடனே கவர்வேன்'
-மகா.ஆதி. வாரணு-45

இவ்வாறு ஒரு பசுவின் பொருட்டுத் தன்னை நாடி வந்த துரோணரை, நீ யார்? என்று கேட்டு எள்ளி நகையாடினான் அவன் நண்பன் என்று பாரதம் சுட்டிக் காட்டுகின்றது. இவ்விருவரும் கூட ஒரே முனிவ

ரிடம் பயின்றவர்தாம். யாக சேனன் மன்னன். துரோ ணரோ முனிவர். இருப்பினும் மன்னனான யாகசேனன் அந் தணரான துரோணரை மதிக்க வில்லை.

தன்னைக் காணவந்த குசேல னிடம் கண்ணன் அன்பு காட் டியது மட்டுமின்றி தன் பழைய நாட்களின் கதைகளையெல் லாம் பேசினான். பின்னர் குசே லனின் குடும்ப நலனை விசா ரித்தான். மனைவி மக்கள் பற் றியெல்லாம் கேட்டான். கடை சியில் 'என்னைக் காண அன் புடன் வந்துள்ளாயே! எனக் காக என்ன கொண்டு வந்துள் ளாய்?'' என்று கேட்டான்.

இத்தகைய செல்வச் செழிப் புடன் வாழும் கண்ணபெருமா னுக்கு நாம் எதனைத் தரு வது? அமுதம் போன்ற அவன் அளித்த உணவெங்கே? நாம் கொண்டு வந்த அவல் எங்கே? என்று எண்ணி மௌன மாக இருந்த குசேலனின் மனநிலையைக் கண்ணபெரு மான் தெரிந்து கொண்டான். இவனே தேடிப்பிடித்துக் குசேல னின் கந்தல் ஆடையில் இருந்த மூட்டையைப் பிரித்து அதில் உள்ள அவலை எடுத்துக்கொண் டான்.

'எனக்கு இந்த அவல உண் பதில் அதிக விருப்பம் உண் டென்று உனக்கு எப்படித் தெரி யும்? நான் இதுவரை இது குறித்து ஒன்றுமே சொல்ல வில்லையே! இவ்வவல், அமிழ் தத்தை விடச் சிறப்பாய் உள் ளது' என்று கூறி மேலும் ஒரு பிடி அவல் தின்றான். அமு தத்தை மற்றவர்களுக்கு ஊட் டிய பெருமான், சாதாரண கந் தைத் துணியில், ஏழைக் குசே லனின் அவலை விருப்பத்து டன் உண்டான். அவனுடைய நட்பின் பெருமையை என்ன வென்று சொல்வது?

நாட்டும் இவ்வவல் விருப்பம்
நமக்கு மிக்கு உள்ளது என்று
கேட்டுளாய் கொல்லோ? முன்னம்
கிளர்ந்திருப்பதும் அன்றே என்று
ஏட்டுமென் மலர்ப்பூந் தொங்கல்
இமையவர்க்கு அமிர்தம் முன்னாள்
ஊட்டிய புகழின் மோலோன்
ஒருபிடி அவல் தின்றானே!
--குசேலா-505

பின்னர் கண்ணபெருமானி டம் தான் நாடி வந்த செல்வம் பற்றி ஒன்றுமே கேட்கவில்லை. ஒருநாள் மட்டும் தங்கி இருந்து விட்டு மறுநாள் தன் நாட்டிற் குப் புறப்பட்டான். அங்கிருந்த பெண்கள் அனைவரும் குசேல னுக்குக் கண்ணபெருமான் ஒன் றுமே தரவில்லையே என்று வருந்தினர்.

ஆயின் குசேலன் தன் ஊரை அடைவதற்கு முன்னால் அவன் தோற்றம் முற்றிலும் மாறியது. செல்வந்தனுக்கு உரிய தோற் றமும், அழகும் உடையவன் ஆயினான். பல அரசர்கள் அவனை வந்து தொழுதனர். அவன் இருந்த ஊர் நகரமா யிற்று. அவன் குடிசை மாளி கையானது. இந்திரனும் கீழா னவன் ஆனான் என்று சொல் லத்தக்க செல்வம் உடையவன் ஆனான். இறைவனுடைய அரு ளைப் பெற்றவர் அடைவதற்கு அரிய செல்வமுண்டோ?

மறபடு [illegible]
மாட மாளிகையே ஆகிச்
சொற்படு புலவ ராலும்
சொலற்கரும் சிறப்புவாய்ந்த
விற்படும் அமரர் நாடு
வீழ்ந்துமண் இறைகொண்
டாற்போல்
அற்படுத்து ஒளிர்ந்தது ஐயன்
அருளினிற் சிறந்தது உண்டோ
குசேலோ - 569

யாகசேனன் என்ற அரச னின் நட்பைப் பெற்ற துரோ ணர் பரிகசிப்பிற்கும் ஏளனத் திற்கும் ஆளானார். அவ னைத் தேர்க்காலில் கட்டுவேன் என்று சபதம் செய்கின்ற அள விற்குக் கோபம் அடைந்தார். எப்பயனும் அடையவில்லை. ஆனால் கண்ணபெருமானின் நட்புக்கு இலக்கான குசேலன் பெரும் செல்வம் அடைந்தான். அதுமட்டுமா? சிறப்புடன் வாழ்ந்து வைகுண்டம் அடைந் தார். இதனைக் குசேலபாக் கியானம் சிறப்புடன் கூறுகின் றது.

எனவே நட்பு என்பதற்கு இலக்கணமாய்த் திகழ்ந்தவன் கண்ணபெருமான். அவன் அருளால் எச் செல்வத்தையும் அடைய முடியும். அதே அன் பினைக் குசேலனும் கண்ண பெருமான் மீது வைத்திருந் தான். இதனை ஒரு பாடல் மிக அற்புதமாய்ப் படம் பிடித் துக்காட்டுகின்றது. கண்ணபெ ருமானைக் கண்ட குசேலனின் மகிழ்ச்சி பின்வருமாறு வர்ணிக் கப்படுகின்றது.

வறியவன் புதையலைக் கண் டது போலவும், பசித் துன் பத்தால் வருந்தியவன் அமு

த்தைக் கண்டது போலவும், வெயிலில் களைப்படைந்தவன் கற்பக மரத்தைக் கண்டது போலவும், உண்மையான மாணவன் தன் ஆசிரியனைக் கண்டது போலவும் கண்ணனைக் கண்ட குசேலன் மகிழ்வடைந்தானாம்.

வருந்தும் ஓர் மிடியன் சம
வைப்புஎதிர் கண்டாற் போலும்,
அருந்தும் உணவு இழந்தோன்
விண்ணோர்
அமுது எதிர் கண்டாற் போலும்,
பரிந்துவெப்பு உழலுவோன் கற்
பகம்எதிர் கண்டாற் போலும்,
சரிந்த பற்றினன் மெய் ஆசான்
தனைஎதிர் கண்டாற் போலும்
குசேலா-427

எனவே கண்ணபெருமானிடம் குசேலன் கொண்ட நட்பானது உயர்ந்த நட்பாகும். இந்நிகழ்ச்சி இறைவனின் சௌலப்பிய குணங்கட்குச் சான்றாய் நிற்கின்றது. அப்பெருமானுடன் நட்பு கொண்டமையால் அக்குசேல முனிவன் மற்றவர்களால் தொழத்தக்கவனாய் அமைகின்றான்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பெருமாள் திருமொழியில் இக் குசேலனின் பெருமையைப் பற்றி மிக அற்புதமாகக் குலசேகர ஆழ்வார் பேசுகின்றார். அவர் குசேலன் பற்றிக் கூறும் போது இறைவனுடைய திருப்பாதங்களை அடைகின்ற பாக்கியம் ஒன்றே போதும் என்று எண்ணியவர். பெரும் செல்வம் வேண்டாதவர். அக்குசேலருக்கு எல்லாச் செல்வமும் அளித்த பெருமான் என்று இறைவனைப் போற்றிப் புகழ்கின்றார்.

நின்னையே தான்வேண்டி
நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும்
செல்வம்போல் மாயத்தால்
மின்னையே சேர்திகிரி
வித்துவக் கோட் டம்மா!
நின்னையே தான்வேண்டி
நிற்பன் அடியேனே!
-நாலா-பெருமாள் - 5-9.

அக் குசேலன் போன்று நானும் உன்னையே வேண்டி நிற்கின்றேன் என்று குலசேகர ஆழ்வார் பாடுகின்றார். எனவே பெருமானின் தாள்களுக்கு அன்பு பூண்டோர் அனைத்து செல்வங்களையும் அடைவர் என்று உணர முடிகின்றது.

அப்பெருமானுடன் குசேலன் கொண்ட நட்பு உயர்ந்த நட்பு. அந்நட்பு போன்ற மேதகு நட்பினையே உலகோர் கைக்கொள்ள வேண்டும் என்று நமக்கெல்லாம் உணர்த்துகின்ற நட்பு. உயர்ந்தோர் மாட்டு கொள்கின்ற நட்பு உயர்ந்த நிலையையே எய்துவிக்கும் என்ற இவ்வுண்மையைக் குசேலர் வரலாறு நமக்கு உணர்த்துகின்றது. குசேல முனிவனின் தாள்களை வணங்குவோம். அப்பெரியோனைப் போன்றே கண்ணபெருமானின் திருவருளையே நாடுவோம்.



(26-ஆம் பக்கத்தொடர்ச்சி)

தில் நரசிம்மமாகவும், ராமனாகவும், கிருஷ்ணனாகவும், அருள் மிகு கோவில்களிலும் அன்பர்கள் இல்லங்களிலும் விக்ரக வடிவில் இருந்து அருள்மழை பொழிய ஓர் காரண காரியமாகத் திகழ்கிறது. அவதார ரகசிய விசேஷத்தாலும், லீலா விநோதங்களாலும் இதிகாசங்கள், புராணங்கள், பிரபந்தங்கள். ஏற்பட வித்தாக இருந்தது. சனாதன தர்மத்திற்கு வேண்டிய எல்லா அரும்பெரும் பொக்கிஷங்களும் இறைவனின் அவதார மகிமையின் கருணையால் கிடைத்தது.

இப்படியாக அவர்கள் பெற்ற சாபவிமோசனம், ஜீவர்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்தது. கொடிய விஷம் சில நோய்களுக்கு மருந்தாக, மருத்துவர்களுக்கு பயன்படுவது போல் 'ஜய, விஜய'ர்களின் கொடுமையான பொல்லாத பிறவிகள்' இறைவனை பூவுலகிற்கு இறங்கி வரச்செய்து அவதாரம் எடுக்கச்செய்து, அதனால் கட்டுக்குள் அடங்காத, வார்த்தைகளின் வர்ணிப்பில் வடிக்கமுடியாத, அளவிடமுடியாத, அபரிவிதமான நன்மைகள் ஜீவர்களுக்கு வரப்பிரசாதமாக ஒரு சன்மானமாகக் கிடைத்தது என்றால் அதில் வியப்பு என்ன இருக்கிறது!



# தவச்செல்வர் ஆளவந்தார்

திரு. சோ. ரங்கசுவாமி - நாட்டரசன்கோட்டை.

**"உண்மையாகத்தான் சொல்கிறீர்களா! இந்த சிறு பாலகனுக்கா இத்தனைத் துணிச்சல்?!!"**

"மலையோடு மோதப்பார்க்கிறுன். தலைதான் போகப்போகிறது?"

இப்படி பலவாறுன பேச்சுக்கும் பரபரப்புக்கும் என்ன காரணம்?

'மகா பாஷ்ய பட்டர்' என்ற பெரியவரிடம் மாணுக்கனாக இருக்கிறுன் இந்த பாலகன். பெயர் 'யமுனைத் துறைவர்'. அந்த தேசத்து அரசனின் ஆஸ்தான வித்வானாக 'வித்வஜன கோலாகலன்' என்ற சிறப்பு பட்டம் பெற்று ஆக்கியாழ்வான் இருந்து வருகிறுன். வித்வஜன கோலாகலன் எல்லா வித்வான்களையும் வாதத்தில் ஜெயித்து தமக்கு அடிமையாக்கிக் கப்பம் வாங்கிவந்தான்.

மகா பாஷ்ய பட்டரையும் கப்பம் கட்டும்படி உத்தரவு அனுப்பி இருக்கிறுன். யமுனைத்துறைவரின் ஆசிரியரான பட்டரும் கப்பம் கட்டத தன்னிடம் ,பொருளில்லை என்று வருந்திய போது விஷயம் யமுனைத் துறைவருக்கு எட்டியது. எரிமலையாய் வந்தார். தகவல் கொண்டுவந்த ஏவலரின் கையில் இருந்த உத்தரவை வாங்கிக் கிழித்து எறிந்தார். "உம்முடைய வித்துவான் எந்த வித்தையில் சிறந்தவர்? இனி கப்பம் கட்டப்போவதில்லை என்று சொல்!' என்று மறுமொழி சொல்லி காவலரை அனுப்பி வைத்தார்.

"ஒரு சிறுவன் ஆஸ்தான வித்வானை இகழ்வாக பேசிவிட்டானா? பேசியதோடு அல்லாமல் தன் ஆசிரியர் இனி கப்பம் கட்டப்போவதில்லை என்று கூறுகிறுன்" என்று கோபத்தோடு புறப்பட்ட வித்வஜன கோலாகலன் அரசனிடம் முறையிட்டார். அரசனும் தம் ஏவலாளிகளை அனுப்பி யமுனைத்துறைவரை உடனே அழைத்துவரக் கட்டளையிட்டார்.

ஏவலர்கள் யமுனைத்துறைவர் இருப்பிடம் வந்தனர். 'அரசர் தங்களை உடனே அழைத்துவரக் கட்டளையிடுள்ளார்' என்று தெரிவித்தனர்.

"உங்கள் ஆஸ்தான வித்வானுடன் வாதிடவரும் என்னை சபா வித்வானகளை அழைப்பது போல் உரியமுறையில் அழைத்தால் வருகிறேன்" என்ருர் யமுனைத்துறைவர்.

பல்லக்கு வந்தது. பரிவாரங்கள் வந்தன. மரியாதை ஏற்றுக்கொண்டு தன் ஆசிரியர் ஆசிர்வாதம் பெற்று, பெற்ருேர் குலதெய்வ சிந்தனையுடன் யமுனைத்துறைவர் பல்லக்கில் ஏறி அரண்மனைக்குப் புறப்பட்டார்.

'வித்வஜன கோலாகலன்' என்று விருது பெற்ற ஆக்கியாழ்வானை வாதில் ஜெயிக்க 'யமுனைத் துறைவர்' என்ற பாலகன் வருகிறுன் என்ற விபரம் ஊர் மக்களிடம் காட்டுத்தீயாக பரவியது.

இந்த அதிசயத்தைப் பார்க்க அரண்மனை உப்பரிகையில் அரசனுடன், அரசியும் வந்தனர்.

"நாதா! அதோ பல்லக்கில் வரும் பாலகனைப் பார்த்தீர்களா! முகத்தில் எப்படி தேஜஸ் ஜொலிக்கிறது. கம்பீரத்தை பார்த்தீர்களா!!"

"பாலகன் பார்ப்பதற்கு அழகாய் இருந்துவிட்டால் போதுமா!? நம் சபை வித்வானுடன் வாதிட இவனுக்கு திராணி இருக்கிறதா என்பதை முதலில் பார்"

"பாலகனைப் பார்க்கும் போது நிச்சயம் இவன் வாதில் வெல்லுவான். நம சபை வித்வான் தோற்பது உறுதி என்றுதான் என்மனதில் தென்படுகிறது."

"பெண்புத்தி பின்புத்தி என்று நிரூபித்துவிட்டாயே. தோற்றத்தை வைத்து எடை போடலாமா? நம் சபை வித்வானின் மகத்துவம் அறியாமல் பேசுகிருய். கலைவாணி அருள்பெற்ற நம் வித்வான் எங்கே? இளங்கன்று பயம் அறியாது என்று வரும் பாலகன் எங்கே?"

அவ்வளவுதான்! அரசனுக்கும், அரசிக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. "யமுனைத்துறைவர் தோற்ருல் பட்டமகிஷி

என்று இல்லாமல் தாதியாகி அடிமையாகிறேன்'' என்று சபதம் செய்தாள். "யமுனைத் துறைவர் வாதத்தில் ஜெயித்து விட்டால் பாதி ராஜ்யத்தை அவருக்குக் கொடுத்து விடுகிறேன்'' என்று அரசரும் சபதம் செய்தார். வித்வான்கள் வாக்குவாதத்திற்கு முன்பு அரசன் - அரசி வாக்குவாதம் இப்படியான ஒரு முடிவுக்கு வந்தது.

அரச சபை கூடிற்று. யமுனைத்துறைவரும் வித்வஜன கோலாகலரும் வாதத்திற்கு தயாரானார்கள். தான் கற்ற வித்தைகள் அனைத்தும் பயன்படுத்தி வித்வஜன கோலாகலர் கேள்வித் கணைகளை சரமாரியாகத் தொடுத்தார். கேள்வி முடிவதற்கு முன்பே யமுனைத் துறைவர் சரியான விடைகளை அளித்து அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தினார்.

இப்போது யமுனைத்துறைவர் கேள்வி கேட்க, பதில் சபா வித்வான் சொல்ல வேண்டிய முறை வந்தது.

"வித்வஜன கோலாகலரே! நான் கூறும் கேள்விகளுக்கு 'ஆம்' என்று நான் கூறுவதை நீவிர் 'அல்ல' என்று மறுக்க வேண்டும்' என்றூர். சபா வித்வானும் சம்மதித்தார்.

கேள்விகளைத் தொடுத்தார் யமுனைத்துறைவர் (1) உன்னைப் பெறற தாய் மலடியல்ல! நான் 'ஆம்' என்கிறேன். நீவிர் மறுத்து தரக்கம் செய்வீர்?

கேள்வியைக் கேட்டதுமே வித்வான் வெடவெடத்துப் போனார். என் தாய்க்கு நான் பிள்ளையாக இருக்கும் போது, மலடி என்று எப்படி தர்க்கம் செய்வது? திகைத்தார் சபா வித்வான்.

சரி, அடுத்தக் கேள்வி.

(2) இந்த தேசத்திய நம்முடைய ராஜா புண்ணியவான்! நான் 'ஆம்' என்கிறேன். நீவீர் மறுத்து பேசுவீர்!!

அவரது தேசத்தில் அவரது அரச சபையில் வித்வானாக இருந்து ஊதியம் பெற்றுக் கொண்டு அரசரையே பாவம் செய்தவர் என்று எப்படிக் கூற முடியும். கூறினால் சிறைத்தண்டனைதான் கிடைக்கும். இந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல இயலாமல் திணறினார்.

மூன்றுவது வினாவைத் தொடுத்தார் யமுனைத் துறைவர் (3) இத்தேசத்து ராஜபத்தினி 'பதிவிரதை'. நான் 'ஆம்' என்கிறேன். நீவீர் மறுத்து பேசுவீர்!!

இந்தக் கேள்வியை கேட்டதுமே அரச சபை வித்துவான் ஆடிப்போய்விட்டார். ராஜபத்தினியை பதிவிரதை இல்லை என்று சொன்னால் உடனே சிரச்சேதம் அல்லவா பரிசாகக் கிடைக்கும்?

கேள்வியைக் கேட்டதுமே சபா வித்வானுக்கு கோபம் வந்துவிட்டது. "மறுத்துக்கூற முடியாத கேள்விகளைக் தேடபதால் தோல்வியை ஒப்புக் கொள்ள இயலுமா? இந்த மூன்று கேள்விகளில் ஒரு கேள்வியாவது உம்மால் மறுத்து தர்க்கம் செய்ய இயலுமா? என்று கேட்டார். அப்படி மறுத்து பேசிவிட்டால் எனது தோல்வியை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றூர்.

"ஒரு கேள்வி என்ன அத்தனைக் கேள்விகளுக்கும் தர்க்க ரீதியில் மறுத்துப் பேசுகிறேன். வித்வான் அவர்களே நீங்கள் கலைவாணியை வணங்குவதுண்டா?''

"என் தாய் கலைவாணியை தினமும் வணங்கி வருகிறேன்.''

"கலைவாணி தங்கள் தாய் என்றூல் நீங்கள் பிள்ளையாக சுவீகரிககப்பட்டீரா?''

"கலைவாணியின் அருளால் 'வித்வஜன கோலாகலன்' என்ற பட்டம் பெற்றதால் கலைவாணியின் பிள்ளைகளுள் என்னையும் பிள்ளையாக அங்கீகரித்து இருககிறுள் என்ச் சொல்லலாம்.''

"தங்களைப் பெற்ற தாயை தினமும் வணங்குவது உண்டா?''

"கிராமத்தில் என் தாய் இருப்பதால் தினமும் வணங்க முடியாது. முக்கிய நாட்களில் சென்று வணங்கி வருவேன்.

"தங்கள் தாயை ஆதரிப்பது யார்? பிள்ளையைப் பார்க்க வேண்டும் என்றூல் என்ன செய்வாள்?''

"என் தாயை சிறப்பாகத் தான் சம்ரட்சணை செய்துவருகிறேன். பணியாட்கள் பலரை

நியமித்திருக்கிறேன். என்னைப் பார்க்கவேண்டும் எனறு விரும்பினால் தகவல் அனுப்பிவைப்பாள். உடன் நான் பார்க்கச் செல்வேன், அல்லது தாய் இங்கே வர ஏற்பாடு செய்வேன்."

"பெற்ற பிள்ளை பக்கத்தில் இல்லை. நினைத்த நேரத்தில் பிள்ளையே பார்க்க இயலவில்லை. தனக்குப் பிள்ளை இருந்தும் மற்றவர்கள்தான் தன்னைப் பாதுகாக்க வேண்டிய அவலநிலை. இப்படி பிள்ளை இருந்தும் பிள்ளையில்லாதவளாக இருக்கிறாள்! பிள்ளையும் கலைவாணி தன்னை சுவீகரித்துக் கொண்டுள்ளதாக நினைக்கிறார். மேலும் சாஸ்த்திரப்படி ஒரு பிள்ளையை மட்டும் பெற்றுவிட்டால் புத்திரவதி என்று சொல்லமுடியாது. ஒரு மரம் தோப்பல்ல என்ற முறையில் தர்க்க ரீதியில் உன்னைப் பெற்ற தாய் புத்திரனில்லாதவள் (மலடி) என்று சொல்லலாம்."

முதல் கேள்விக்கு பதில் வந்தவுடனேயே அரசர் முந்திக் கொண்டார். "யமுனைததுறைவரே இரண்டாவது மூன்றுவது கேள்விகளுக்கு எப்படி மறுத்து தர்க்கம் செய்ய உள்ளீர்!"

"அரசே தங்கள் தேசத்தில் நீதிமன்றங்கள் இருக்கிறதா?"

"ஒவ்வொரு நகரத்திற்கு ஒவ்வொரு நீதிஸ்தலம் உள்ளது. நீதி வழங்க அதிகாரிகள் பலரை நியமித்து இருக்கிறேன். என் ஆட்சியில் எந்தக் குற்றவாளியும் தப்பிக்கமுடியாது. குற்றவாளியைத் தண்டிக்கச் சிறைச் சாலைகள் பல உள்ளன."

"அரசே தங்கள் கூற்றுப்படியே நம் நாட்டில் குற்றவாளிகள், பாவம் செய்பவர் இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. 'சாஸ்த்திர ரீதியாக தேசத்தில் ஜனங்கள் செய்யும் பாவங்கள் அரசனைத்தான் சேரும். ஆகையால் அரசர் தர்மம் காப்பவராக, புண்ணியவானாக இருந்தாலும் ஜனங்கள் செய்யும் பாவங்கள் அரசனையே சாரும் என்பதால் தர்க்கரீதியில் அரசர் புண்ணியவான் இல்லை என்று சொல்லலாம்."

மூன்றுவது கேள்விக்கு பதில் அறிய அவையோர் அத்தனை பேருக்கும் நடுவில் அரசி பதிவிரதையற்றவள் என்று எப்படி நா கூசாமல் கூறமுடியும்?

அவையோர் அப்படி நினைத்திருக்கையில் யமுனைத்துறைவர் தனது விளக்கத்தை ஆரம்பித்தார்.

"அரசியே தாங்கள் நந்தவனத்திற்குச் சென்றதுண்டா?"

"மாலை நேரங்களில் காற்று வாங்க நந்தவனத்திற்குத் தினமும் செல்வதுண்டு."

"இதிகாசங்களில் பஞ்சபூதங்களை, அஷ்டதிக்பாலர்களை ஆண்பாலாக கூறுவதுண்டு. வாயுபகவான் மூலமாக புத்திரர்கள் பிறந்தனர் என்று இதிகாசத்தில் உள்ளது. சுவாசிப்பதால் காற்று (வாயுபகவான்) அரசியின் திருமேனியைத் தழுவுவதாலும், பஞ்சபூதங்களில் ஒன்றுன நீர் மூலம் குளிப்பது, தாகத்துறகு அருநதுவது மூலம் வருணன் அரசியின் திருமேனியை தீண்டுவதாலும், உடம்பில் உஷ்ணம் (அக்னி பகவான்) எப்போதும் இருப்பதாலும், இப்படியாக "பர்த்தா" பக்கத்தில் இருப்பதைவிட பஞ்சபூதங்கள்தான் முழுநேரமும் அரசியை அரவணைத்தபடி இருக்கிறார்கள். மேலும் சாஸ்திரங்களில் பெண்கள் அந்தந்தப் பருவங்களில் இந்திரன், கந்தர்வன், அக்னி முதலியவர்களுக்கு மனைவி என்று சாஸ்திரங்கள் கூறுவதால் தர்க்க ரீதியில் அரசி, அரசனுக்கு மாத்திரம் உரித்தானவளல்ல' என்று மூன்றுவது கேள்விக்குப் பதில் கூற வித்வ்ஜன கோலாகலனும் தம் தோல்வியை ஒப்புக்கொண்டார்.

அரசனும் தன் வாக்குப்படி பாதி ராஜ்ஜியத்தைக் கொடுத்து அவரை அரசராக்கினார். அரசியும் தம் சபதப்படி தான் அடிமையாகாமல் யமுனைத்துறைவர் ஜெயித்ததைக் கண்டு ஆனந்தம் பொங்க 'நாட்டை ஆளவந்தீரே! என்று யமுனைத்துறைவரை அழைத்தார் அன்று முதல் யமுனைத் துறைவர் என்ற பெயர் மாறி 'ஆளவந்தார்' என்ற நாமமே புகழ் பெற்றது.

மணக்கால்நம்பி சுவாமியின் சிஷ்யராக இருந்து வைஷ்ணவ குருபரம்பரையில புகழ் பெற்று அருந்தொண்டு ஆற்றியவர்தான் ஆளவந்தார் சுவாமிகள். இவர் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருப்பேரனார். உடையவர்களுடைய ஆசாரியர்களுக்கு ஆசாரியர். ஆடி உத்த

ராடத்தில் காட்டுமன்னார் ஸந்நிதியில் திருவவதரித்தவர். ஒபபுயரவற்ற மஹாவித்வான். ஆகமப்ராமாணயம், ஸித்தித்ர யம், கீதார்த்த ஸங்கிரஹம், ஸ்தோத்ர ரத்நம், சதுச்லோகீ முதலிய கிரந்தங்களை அருளிச் செய்தவர். இவருடைய கடாக்ஷத்தினாலேயே உடையவர் ஸித்தாந்த ப்ரவரத்திகரானார்.

ஆளவந்தாரின் ஆன்மீகப் பணி, வைஷ்ணவத்தொண்டு காலத்தால் அழியாததாகும். பொன் எழுத்துக்களால் பொறிக்கபபடவேண்டியவையாகும்.

“மச்சணியும் மதிளரங்கம்
வாழ்வித்தான் வாழியே
மறைநான்கு மோருருவில்
மகிழ்ந்துகற்றுன் வாழியே
பச்சையிட்ட ராமர்பதம்
பகருமவன் வாழியே
பாடியத்தோ னீடேறப்பார்வை
செய்தோன் வாழியே
கச்சிநகர் மாயனிரு கழல்
பணிந்தோன் வாழியே
கடக வுத்தராடத்துக்
காலுதித்தான் வாழியே
அச்சமற மனமகிழ்ச்சி
யணைந்திட்டான் வாழியே
ஆளவந்தார் தாளிணைக
ளனவரதம் வாழியே”

“ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்”



<u>தெரிந்து கொள்ளுங்கள்:</u>

# தோப்புக் கரணம்

ஒரு சமயம் மஹா விஷ்ணுவினுடைய சக்கரத்தை அவரது மருமகனான பிள்ளையார் விளையாட்டாகப் பிடுங்கி தம் வாயில் போட்டுக் கொண்டு விட்டார். பிள்ளையாரிடமிருந்து அதனை திரும்பிப் பிடுங்குவதென்பது அத்தனை எளிய காரியமா என்ன? குழந்தைக் குணம் கொண்டவராயிற்றே! அதட்டி மிரட்டி வாங்கவும் முடியாது.

ஆனால் அவனைச் சிரிக்கவைத்து சந்தோஷத்தில் அவர் வாயிலிருந்து, சக்கரம் கீழே விழுந்தால் எடுத்துக்கொண்டு விடலாம் என்று மஹாவிஷ்ணுவுக்குத் தோன்றியது.

உடனே தன் நான்கு கைகளாலும் காதுகளைப் பிடித்துக் கொண்டு மேலும் கீழுமாக ஆடத்தொடங்கினார். அதுகண்ட பிள்ளையார் விழுந்து விழுந்து சிரித்தார். உடனே சக்கரம் கீழே விழுந்தது. விஷ்ணு உடனே எடுத்துக்கொண்டு விட்டார்.

“தோர்பி; கர்ணம்” என்பதே தோப்புக்கரணம் என்று மாறியது. “தோர்பி” என்றால் கைகளினால் என்று அர்த்தம். ‘கர்ணம்’ என்றால் காது. தோர்பி கர்ணம் என்றால் கைகளால் காதைப் பிடித்துக் கொள்வது.

(மற்றும் நமது உள்ளங்காலில் இருந்து தலையுச்சி வரை அநேக நரம்புக் கற்றைகள் உள்ளன. நாம் சுறுசுறுப்பாக அடிக்கடி உட்கார்ந்து எழுந்தால் - தோப்புக்கரணம் போட்டால் - அந்த நரம்புக்கற்றைகள் சுருங்கிச் சோர்வடையாமல் ரத்தம் நன்கு பாய்ந்து மூளைக்குப் பலம் சேர்க்கும். ரத்தம் மூளைக்குச் சென்றால் சாந்தமான நினைவுகள் மலரும்.)

***

## உன்னிடமே இருக்கிறான்!

கடவுள் உன்னிடமே இருக்கிறான். மலரினுள்ளே மணம் போல், கஸ்தூரி மான் தன் நாபியில் கஸ்தூரி இருப்பதைத் தெரிந்துகொள்ளாமல், மேய்ச்சல் தரையைச் சுற்றி சுற்றி வருவது போல ஏன் நடந்துகொள்கிறாய்?

--கபீர்தாஸர்.

தொகுத்தவர்: **கமலா மாரியப்பன் - கோவை.**

# பெண்ணரசு நாடு

திரு. கே. வரததேசிகன் - விழுப்புரம்.

நனிமிக்க நீர்வளம், நிலவளம் கொண்ட திவ்ய தேசம் அது. இயற்கை வளம் படைத்த அத் தேசத்தைப் பற்றி திருமங்கை ஆழ்வார் தன் கம்பீரமான வாக்கினால் கனக்கப் பாட கேட்கவும் வேண்டுமோ! இயற்கை அழகை வர்ணிப்பதில் மங்கை மன்னன் ஏனைய ஆழ்வார் களை விஞ்சியுள்ளார் என்று கூறினால் அது மிகையன்று.

அந்த திவ்ய தேசத்திலே ஆம்பல் மலர் ஒன்றில் நண்டு தம்பதிகள் வாழுங்காலத்து, பெண் நண்டு (நள்ளி) நிறை கர்ப்பமானதால் ஆண் நண்டுக்கு (அலவன்) ஒரு ஆசை ஏற்பட்டது. தன் பேடைக்கு இனிய பொருள் களைத் தேடிக் கொணர்ந்து தர வேண்டும் என்பதுதான் அவ் அவா.

ஆகவே அண்மையில் அமைந்த தாமரைப் பூவின் தேனைக் கொண்டுவரக் கருதி அலவன் மெல்ல நகர்ந்து தாமரைப் பூவினை அடைந்தது. அச்சமயம் அந்தி நேரமாதலால் கதிரவன் மறைய தாமரை மலர் மூடிக்கொள்ள அலவன் வெளி வர இயலாது போகவே அவ் விரவு முழுவதும் தாமரை மலரினுள் புரண்டு கொண்டேயிருந் தது. அதன் விளைவாக அதன் உடல் முழுவதும் தாதும் சுண்ணமும் பட்டு, அதன் நிறம் மாறி நினறது.

மறுநாள் காலை ஸூரியோதயமாக தாமரை மலர் விரிந்த அளவில், வெளிவந்த ஆண் நண்டு, தன் பெண்ணரசி வீற்றிருக்கும் ஆம்பல் மலரை நோக்கி நகர்ந்தது. இரவு முழுவதும் ஆம்பல் மலர் விரிந்திருக்க பெண் நண்டு ஆண் நண்டின் வரவை எதிர்பார்த்துக் கதவைத தாளிடாமல் வைத்திருந்ததாகக் கருத இடமுண்டு. ஆனால் ஸூரியோதயத்தில் ஆண் நண்டினைக் கண்ட பெண்நண்டு, தன் கணவன் இரவில் வேறிடம் புகுந்து போகம் புரிந்து மீண்டதாகக் கருதியது.

அக்காலை நேரத்தில் ஆம்பல் மலர் இயற்கையாகக் கூம்பிய தால் பெண்நண்டு ஆண் நண்டுடன் ஊடல்புரிந்து கதவைத் தாளிட்டது போல் இருந்ததாம். ஒரு பக்கம் மலர்ந்த தாமரை களும் மறுபக்கம் கூம்பிய ஆம்பல் மலர்களும் நிறைந்து விளங் கப்பெற்ற வயல்கள் சூழ்ந்த திவ்ய தேசத்தின் வளத்தை அருள்மாரி இவ்விதம் கற்பனை செய்துள்ளார். இக்கற்பனை யைக் கலியன ஒலிசெய்த தமிழ் மாலையாலேயே காண்போம்.

"..........பளளிக் கமலத்திடைப்பட்ட
பகுவாய் அலவன் முகம் நோககி
நள்ளியூடும் வயலசூழ்ந்த
நறையூர நின்றநம்பியே!"

இப்போது புரிகிறதா? அந்த வளம் கொழிக்கும் திவ்யதேசம் சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றான, தற்காலம் நாச்சியார் கோவில் என்று புகழ்பெற்ற திரு நறையூர்தான் என்று.

இதில் என்ன ரஸோக்தி என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா. அதை பட்டர் வாய் மொழியால்தான் அறியவேண்டும். பெரிய திருமொழியில் 6-ம் பத்து ஏழாந்திருமொழி 6-ம் பாசுரமான இதற்குப் பட்டர் விளக்கம் செய்யும் தருவாயில் பிள்ளை நறையூர் அரையர் என்பவர் பட்டரிடம் ஒரு கேள்வி கேட்டார். அதாவது "ஆராய்ந்து பார்த்துக் குற்றம் அறிந்து பின்னையன்றோ தண்டிப்பதாம்" என்பது.

பெண் நண்டு ஆண் நண்டினிடம் எந்த விளக்கமும் பெறாமல், சந்தேகம் கொண்டு, அதனுடன் ஊடிக் கதவைத் தாளிட்டது சரியன்று என்பதே அந்த ஆக்ஷேபம். அதற்குப் பட்டர் கூறிய மறு மொழியில் தான் ரஸோக்தியுள்ளது. 'என் செய்வோம்? கேள்வி இல்லாத படி பெண்ணரசு நாடாயிற்று' என்றாராம் பட்டர். ஆண் அரசு நாடாகில் கேட்பாருண்டு. பெண்ணரசு நாடாதலால் கேட்பாரில்லை என்று பட்டர் சுவை படக்கூறியது திருநறையூரில் பிராட்டிக்குத்தான பிரதான்யம் என்பதை உணர்த்துவதாக அமைந்துள்ளமை இன்பம பயப்பதாகும். இன்றும் அவ்வூரில் திருவீதி புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே எழுந்தருள நம்பி எம்பெருமான பின்னே எழுந்தருளுவது நாம் காணும் காட்சியாகும். ஆனது பற்றியே இத்திவ்யதேசத்திற்கு நாச்சியார் கோவில் என்கிற திருநாமம் ஏற்பட்டுள்ளது போலும்!

இத் திருநறையூரைப்பற்றி பரகாலன் தன் பெரிய திருமொழி

யில் 107 பாசுரங்கள் அருளியுள்ளார். இதே பெருமை பெற்ற மற்றொரு தலம் திருக்கண்ணபுரமாகும். தான் வைணவத்துவம் பெற்றுக் குமுதவல்லியை மணக்க வேண்டி மங்கை மன்னன் இத்தலத்தின் பெருமாளை வேண்டிப் பேறு பெற்றார். மேலும் இத்திவ்ய தேசத்தில் மற்றொரு சிறப்பு என்னெனின் இங்குள்ள கருடவாகனம் கல்லால் சமைந்து 'கல்கருடன்' எனப்பெயர் பெற்றதாகும்.

தலப்புராணப்படி, பிராட்டியார் பிரானைப் பிரிந்து இத்தலத்தில் அவதரித்து மேதாவி ரிஷி என்பவரால் 'வஞ்சுளவல்லி' என்கிற திருநாமம் சாற்றப்பட்டு, அநத ரிஷியால் வளர்க்கப்பட்டார். பிரிந்த நாயகியை தேடிவர நாயகன் ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அனிருத்தன், புருஷோத்தமன், வாசுதேவன் என்று ஐந்து வடிவங்களை அடைந்து இத்திருத்தலத்தை அடைந்து வஞ்சுளவல்லியைத் திருமணம் செய்து கொண்டார். மேதாவி ரிஷியின் பிரார்த்தனைக்கிணங்க, 'இத்தலத்தில் பிறக்கும் அனைவருக்கும் பரமபதம கிட்டவும். அனைத்திலும் பெருமானைக் காட்டிலும் பிராட்டியாருக்கே பிரதான்யம் தரவும், வரங்களை நல்கியருளினார்.

நாமும் திருநறையூர் நின்ற நம்பியான ஸ்ரீநிவாசப்பெருமாளையும் வஞ்சளவல்லித் தாயாரையும் வணங்கி 'தழை நல்ல இன்பம் எங்கும் தழைக்கவே' என்று விரும்பி வேண்டி அவர்களின் அருள் பெற்று உய்வோமாக!



# பக்தி இயக்கமும் ஊர்ப்பெயர்களும்

டாக்டர் இரா. பொன்னு - மதுரை.

"வாழ்க்கைக்குத் தேவையான பல்வேறு துறைகளுள் உயிர் போன்றவை ஊரும் பேரும். அவை வாழ்க்கையை இயக்கி வளர்ப்பன. ஊர் பேரால் உலகம் இயங்குகிறது. ஊர் பேரே உலகம்; வாழ்க்கை எல்லாம் எல்லாம்'' இவை திரு. வி.க. கூறியவை. ஊர்ப் பெயர்கள் மூலமாக மனித இனம் படைத்த வரலாறு அறியப்படும். முன்னோர்கள் ஏற்படுத்திச் சென்ற சமூக, சமய மாற்றங்கள் உணரப்படும். அவ்வடிப்படையில் தமிழகம் கண்ட பக்தி இயக்கம் ஊர்ப்பெயர்களில் எங்ஙனம் புலப்படுகிறது என்பதை இக்கட்டுரை ஆய்கின்றது. அறிஞர் சேதுப்பிள்ளை யாத்த 'தமிழகம் ஊரும் பேரும்' என்ற நூல் இக்கட்டுரைக்கு அடிப்படையாக அமைந்தது.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் நடத்திய பக்தி இயக்கம் தமிழக மக்களின் சமூக வாழ்வில் பல்வேறு விதங்களில் மாறுதலை ஏற்படுத்திச் சென்றது. பக்தி மார்க்கத்தின்பால் ஈர்க்கப்பட்டு சைவ, வைணவ நெறிகளில் பண்பட்ட மக்கள் திருத்தொண்டாற்றுவதில் மகிழ்ச்சியும் மனநிறைவும் பெற்றனர். அடியார்க்கு அடியாராக தொண்டர்க்கும் தொண்டராக வாழ்ந்து இறைமையை உணர்ந்த பக்தி நெறியாளர்கள்மீது மரியாதையும் பக்தியும் கொண்டனர். திருத்தொண்டர்க்குத் திருத்தொண்டாற்றியே திருத்தொண்டர் வரிசையில் இடம் பெறும் பேறு பெற்றனர். சடகோபனைத்தவிர தேவு மற்றறியாது அவன் புகழ் பரவி இன்னிசை பாடித் திரிவதில் இன்பம் கண்ட மதுரகவியும், 'அளவைக ணிறைகோன் மக்களோடு மேதி மற்று முளவெலாம்' நாவுக்கரசரின் பெயர் சாற்றியதுடன் மடங்கள், தண்ணீர்ப் பந்தர்கள் யாவும் நாவுக்கரசர் பெயரில் வழங்குவித்து பக்தி செலுத்திய அப்பூதி நாயனாரும் அத்தகைய மேன்மை பெற்றனர். திருத்தொண்டர்மீது வைத்திருந்த பக்தியால், அவர்களது திருநாமங்களை மக்கள் சூட்டிக் கொண்டனர். மடங்கள் அவர்களின் பெயரால் அழைக்கப்பட்டன. கோயிலை நடுநாயகமாகக் கொண்டு அடியார்கள் அருளிச் சென்ற சமுதாய வாழ்வில், கோயிலை அடிப்படையாகக் கொண்டு ஏராளமான ஊர்ப்பெயர்கள் அமைந்ததுடன் கிராமங்கள் அடியார்களின் பெயர்களைத் தாங்கி நிற்பதிலும் பெருமை அடைந்தன. பக்தி இயக்க நாயகர்களின் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஊர்ப்பெயர்களில் நிழலாடின. அவர்கள் ஆற்றிய அற்புதங்கள் ஊர்ப் பெயர்களில் நினைவூட்டப்பட்டன. அவர்கள் இசைத்த திருப்பாக்களின் உயர்சிறப்பும் அவற்றைப் பாடுவதில் மக்களிடம் இருந்த நல்லீடுபாடும் ஊர்ப்பெயர்களால் உணர்த்தப்பட்டன. பக்தி இயக்கத்தின் தாக்கத்தை ஊர்ப் பெயர்கள் நாளும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

## கல்வெட்டுகளில்

தமிழக வரலாற்றின் நடுவண் காலம் தொட்டே பக்தி இயக்க அருட்செல்வர்களின் பெயர்கள் ஊர்களுக்கு வழங்கி வந்தன என்பதைக் கல்வெட்டுகள் தெளிவுப்படுத்துகின்றன. திருநாவுக்கரசர், சம்பந்தர் போன்ற நாயன்மார்கள் மீது மக்கள் கொண்டிருந்த பக்தியின் காரணமாக திருநாவுக்கரைய நல்லூர்(A.R.E., 1918, No. 380) திருஞான சம்பந்த நல்லூர்(A.R.E., 1925, No. 180) திருஞான சம்பந்தர் சதுர்வேதி மங்கலம் (A.R.E., 1918, No. 376) என ஊர்களுக்குப் பெயரிடப்பட்டன. திருத்தொண்டர் மாக்கதைக்கு அடிப்படையாக அமைந்தது சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத் தொகை பதிகமாகும். அப்பதிகம் மீது இறையன்மார்கள் கொண்டிருந்த ஈடுபாட்டின் மிகுதியால் திருத்தொண்டத் தொகை நல்லூர் (A.R.E., 1911, No. 146) திருத்தொண்டத் தொகை மங்கலம் (A.R.E., 1906 No. 54) என ஊர்ப் பெயர்களும் அமைந்தன.

## திரு (அ) ஸ்ரீ

ஆழ்வார்கள் வைபவத்தோடு தொடர்பு பெற்று, அவர்

ளால மங்களா சாசனம் பெற்ற திவ்ய தலங்களும், நாயன்மார் களால் பாடல் பெற்ற தலங் களும், அவர்கள் பதிகங்களில் குறிக்கப் பெற்ற வைப்புத் தலங்களும் சிறப்பிடம் பெற்று திகழ்கின்றன. தெய்வ நலம் பெற்ற தலங்கள் 'திரு' அல் லது ஸ்ரீ அடைமொழி பெற்று சிறப்படைந்தன. திருவா ரூர், திருவானைக்கா, திரு வண்ணாமலை, திருக்கண்ணபு ரம், திருக்கூடலூர், ஸ்ரீரங் கம், ஸ்ரீவைகுண்டம் போன் றவை அத்தகையத் தலங்களுள் சிலவாகும். திருவருட் செல்வர் கள் பிறந்த ஊர்களும் 'திரு' அடைபெற்று வழங்கலாயின. நாவுக்கரசர் பிறந்த ஆமூர் திரு வாமூர் எனவும் சுந்தரர் பிறந்த நாவல் திருநாவல என்ருகி, பின்னர் திருநாமநலலூர் என வும், மாணிக்க வாசகர பிறந்த வாதவூர் திருவாதவூர் எனவும் பெயர் பெற்றன. ஆச்சார்யார் இராமானுஜர் பிறந்த பெரும்பு தூர் ஸ்ரீபெரும்பூதூர் எனவும் வழங்கியது.

### கோதைபுரி

தமிழ் வேதமெனும் திருவாய் மொழியை அருளிய நம்மாழ் வாரை நாவீறுடையார் என்றும் மால் வழிபாட்டினர் போற்று வர். அப்பெயரை நினைவூட்டு வதாக திருநெல்வேலி மாவட் டத்தில் நாவீறுடையபுரம் என்ற பெயரில் ஓர் ஊர் உள்ளது. தொண்டை நாட்டில் திருத்தண் காவில் உறையும் பெருமானைப் பரவிப் பாடுகையில்,

விளக்கொளியை மரகதத்தைத்
திருத்தண்காவில்
வெஃகாவில் திருமாலை
பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன்!...

என்று திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் குறிப் பிடுவார். அவரது திருவாக கால் திருத்தண்கா 'விளக்கொளி கோயில்' எனவும் வழங்கப்படும். சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யார் ஆண்டாள் அவதரித்த 'ஸ்ரீவில்லிப்புத்தூர்' கோதை புரி எனவும் வைணவத்தால் அழைக்கப்படும். (ரா.பி. சேதுப் பிள்ளை, தமிழ்கம் ஊரும்பேரும், சென்னை, 1987, ப 307)

### சிந்து பூந்துறை

பொருநையாற்றின் கரை யில் அமைந்துள்ள பூந்துறை யின் இயற்கையழகைக் கண்டு மகிழ்ந்த சம்பந்தர் தான் கண்டு களித்த இயற்கைக் காட்சியினை

கந்தமார்' தருபொழில்
மந்திகள் பாய்தர மதுத்திவலை
சிந்து பூந்துறை கமழ்
திருநெல்வேலி யுறை
செல்வர்தாமே.

என்று பாடினார். பாட லின் ஈற்றடியில் முதலெடுப் பாய் வரும் சிந்துபூந்துறை என்ற தொடரையே அத்துறை யின் பெயராக வழங்கி, அதன் கண் அமைந்த ஊரும் சிந்துபூந் துறை என்றே அழைக்கப்பட்டு வருகின்றது. (ரா.பி. சேதுப் பிள்ளை, தமிழகம் ஊரும்பேரும், சென்னை, 1987, ப. 299)

### கரியுரித்த நாயனார் கோவில்

திருநெல்வேலிக்குத் தென் மேற்காக அமைந்துள்ள திருக் கொள்ளிக்காட்டில் உறையும் இறைவனை,

வெஞ்சின மருப்போடு விரைய
வந்தடை
குஞ்சரம் உரித்தனர்
கொள்ளிக்காடரே

எனச் சம்பந்தர் பாடினார். ஆதலால் அவ்வூர் கரியுரித்த நாயனார் கோவில் எனவும் வழங்கப்பெறும். (ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், சென்னை, 1987, ப. 169)

### மணந்தவிர்ந்த புத்தூர்

சுந்தரருடைய முதல் திரு மணத்தை இறைவன் வல்வ ழக்கிட்டுத் தடுத்தாட் கொண் டார். வழக்கிட்டுத் தடுத்த மையால் அதனை நினைவூட் டும் விதமாக திருவெண்ணெய் நல்லூருக்கு 2 கி.மீ. கிழக்கே தடுத்தாட்கொண்டவூர் அமைந் துள்ளது. சுந்தரர் திரு மணம் தவிர்க்கப்பட்டமையால் பண்ருட்டிக்கு மேற்கே 61/2 கி.மீ. தொலைவில் மணந்தவிர்ந்தபுத் தூர் என அந்நிகழ்ச்சி நடந்த ஊர் பெயர் பெறலாயிற்று. (கழ கப்புலவர் குழு, (தொ.) சிவப் பதிகள் வரலாறு, சென்னை, 1977, ப. 124) சுந்தரர் திரும ணம் செய்யப் போந்த புத்தூர் மணம்வந்த புத்தூர் என்பதா யிற்று.

### அழகார் திருப்பத்தூர்

கும்பகோணத்துக்குத் தென்கி ழக்கில் 7 கி.மீ. தொலை வில் அமைந்துள்ள அரிசிற்க ரைப்புத்தூரில் உறையும் படிக் காசளித்த ஈசனைப்பாடுகையில் சுந்தரர் அவ்வூரை அழகார் திருப்பத்தூர் என்று குறிப்பிட் டுப் பாடினார்.

அலைக்கும் புனல்சேர் அரிசில்
தென்கரை
அழகார் திருப்பத்தூர் அழகன் நீரே

என்ற சுந்தரரின் தேவாரப் பாடலை சைவர்கள் உளமுருக பாடப்பாட அழகார் திருப்பத் தூர் என்ற தொடர் அவர்கள் மனதில் நன்கு பதிந்து, அரிசிற் கரைப் புத்தூர், அழகார் திருப் புத்தூர் என்று பெயர் மாறி, இன்று அழகாதிரிப்புத்தூர் என மருவி வழங்குகின்றது. (ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், 298)

துலாநயினார்கோயில்

திரு ஆரூர்ப் பரவையுண் மண்டளி நாதனை சுந்தரர் பாடி, கோயில் குளத்தில் முழுகி இழந்த கண்பார்வையைப் பெற் றூர். 'தூவாயா, தொண்டு செய் வார் படுதுக்கங்கள் காவாயா' என்று சுந்தரர் இசைத்தப் பாட் டின் அடியாகத் தூவாய் நயி னார் என்ற பெயர் அங்குறை யும் இறைவனுக்கு வழங்கி பின் னாளில் அதுவே துலாநயினார் கோயில் என மருவி வழங்க லாயிற்று.

காளையார்கோயில்

தேவகோட்டைக்குத் தென் மேற்காக அமைந்துள்ள காளை யார்கோயிலை 'கானப்பேர்' என தேவார மூவர் பாடு வர். இறைவன் சுந்தரர் கனவில் காளை வடிவத்தோடு தோன்றியருளி "யாமிருப்பது கானப்பேர்" என மொழிந்து மறைந்தார். இதனைச் சுந்தரர் சேரமானுக்குச் சொல்ல இருவ ரும் புறப்பட்டுக் கானப்பேரை அடைந்தனர். சுந்தரர் இவ் வூர் இறைவனை 'கானப்பேர் உறைகாளை' எனப் பாடுவர். காளையாகிய ஈசன் கோயில் கொண்டுள்ள இடம் காளை யார்கோயில் என வழங்கப்படு வதாயிற்று. (ஏ. ஐயப்ப ரெட்டி யார், அகில இந்திய இந்துத் திருத்தலங்கள்)

தண்டேச்சுர நல்லூர்

லிங்க வழிபாட்டிற்கு இடை யூறு செய்த தந்தையைத் தனது மழுவால் எறிந்து தன் பக்தியினை வெளிப்படுத்திய சண்டேச்சுரரை தண்டேச்சுரர் என்றும் பக்தர்கள் வழங்கு வர். அவரது பெயரால் சிதம்ப ரம் அருகே தண்டேச்சுரநல்லூர் என்ற பெயரில் ஓர் ஊர் காணப்படுகிறது.

வைத்தீசுவரன் கோயில்

சீர்காழிக்கு அருகேயுள்ள புள் ளிருக்கு வேளூர் பதியில் கோயில்கொண்டுள்ள இறை வனை நாவுக்கரையரும் சம்பந் தரும் அருமருந்தெனவே கண்டு போற்றினர். 'மந்திரமும் தந் திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான்' என நாவுக்கரையரும், 'செடி யாய உடல்தீர்ப்பான் திருவி னைக்கோர் மருந்தாவன்' எனச் சம்பந்தரும் போற்றிப் பாடு வர். பக்தர்கள் அதுமுதல் அவ்வீசனை வினைதீர்த்தான் என்றும், வைத்தீசுவரன் என் றும் வழங்கினர். நாளடை வில் கோயிலும் அதனையு டைய ஊரும் வைத்தீசுவரன் கோயில் என்று அழைக்கப்படு வதாயிற்று. (சிவப்பதிகள் வர லாறு, ப. 8)

திருவேடகம்

பக்தி இயக்கத்தின் போது தத்தம் சமய உண்மைகளே சிறந் தவை என்பதை நிருபிக்க சம யவாதிகளால் பல்வேறு வாதங் கள் நடைபெற்றன. மதுரையில் சம்பந்தரும் சமணரும் அனல்வா தம், புனல்வாதம் என இருவகை வாதங்களைச் செய்ய நேரிட் டது. அவ்வாறு நடைபெற்ற புனல் வாதத்தில் சமணர்கள் தம் சமய உண்மையை ஓர் ஏட் டில் எழுதி வைகையாற்றில் இட் டனர். அவ்வேடு வைகையின் போக்கில் சென்று மறைந்தது.

சம்பந்தர்,

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்க்கவே

என்ற பாடலை எழுதி, ஏட் டினை வைகையில் இட்டனர். ஆனால் அவ்வேடு தண்ணீரை எதிர்த்து சென்று மதுரைக்கு மேற்கே 12 கல் தொலை வில் கரை அடைந்தது. ஏடு அடைந்த இடமே ஏடகம் (ஏடு + அகம்) என்றாகி, 'திரு' அடை மொழியோடு திருவேடகம் எனப் பெயர் பெற்றது.

திருவளம்புதூர்

சுந்தரர் கண்ணிழந்த நிலை யில் (பூண்டி நீர்தேக்கம் அருகிலுள்ள) திருவளம்புதூர் வந்து அங்குக் காட்சிதரும் இறைவனைப் பாடி ஊன்று கோல் பெற்றூர். இறை வன் 'உளோம் போகீர் என் றுனே' என தலத் திருப்பதிகத் தில் ஒவ்வொரு செய்யுளிலும் அவர் பாடினார். அத்தொ டரே நாளடைவில் உளம்புதூர்

என மருவி, பின்னர் திருவளம் புதூர் என்று பெயர் பெற்றிருக்கக் கூடும். (சிவப்பதிகள் வரலாறு, ப. 139-40) 'பொன்னார் மேனியனே எனச் சம்பந்தர் இறைவனை அழைத்தமையைத் தொடர்ந்து, 'பொன்னார் மேனி விளாகம்' என்று ஒரு ஊருக்குப் பெயரமைந்தது.

### கரையேறவிட்ட குடும்பம்

திருநாவுக்கரசரை அவர் சைவம் ஏகிய பின்னர் சமணர்கள் பல்வேறு விதங்களில் கொடுமைப் படுத்தினர். கல் தூணில் கட்டி நாவுக்கரசரை கடலிலிட்ட போது 'சொற்றுணை வேதியன்' என்னும் பதிகம் பாடி அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு திருப்பாதிரிப் புலியூர்க்கு 3 கி.மீ. தெற்கேயுள்ள ஓர் இடத்தில் கரையேறினார். அவ்விடம் கரையேறவிட்ட குப்பம் எனவே வழங்கப்பட்டு வருகின்றது. (சிவப்பதிகள், ப. 126)



பேலூர் சிற்பம் - கர்நாடகம்

### அருமருந்து

வேப்பத்தூர் என இன்று வழங்கப்பெறும் திருந்துதேவன் குடியில் உறையும் இறைவனை 'திருமருவும் பொய்கை சூழ்ந்த தேவன்குடி அருமருந்தாவன அடிகள் வேடங்களே' என்று சம்பந்தர் பாடுவதால் அருமருந்து என்பது முதலில் இறைவன் திருநாமமாக வழங்கி, பின்னர் அவர் கோயில் கொண்ட தலத்தைக் குறிப்பதாயிற்று. (ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 225)

### சண்பகாரண்யம்

சென்னைக்கு மேற்கேயுள்ள அம்பத்தூர் அருகேயுள்ள திருவடமுல்லைவாயில் தலத்தை 'சண்பகச் சோலை சூழ் திருமுல்லை வாயில்' என்று சுந்தரர் பாடினார். ஆதலால் அவ்வூர் சண்பகாரண்யம் எனவும் பெயர் பெற்றது

### ஆனையுரித்தான் வயல்

திருக்கச்சி அநேக தங்காபதம் (காஞ்சிபுரத்திற்கு வடமேற்கிலுள்ளது) இறைவனை சுந்தரர் பாடுகையில் 'ஆனையுரித்த பிரான் திடங்கலிக்கச்சி யநேகதங்காபதமே' என்றருளினார். அவர்தம் திருவாக்கால் இக்கோயிலுக்கு மேற்கே 'ஆனையுரித்தான் வயல்' என்ற பெயரில் வயல்கள் வழங்கப்பட்டு வருகின்றன.

### சிறுத்தொண்டநல்லூர்

சிவனடியாரைக் கண்டபொழுதெல்லாம் பணிந்து, தாழ்ந்துதுவண்டு நின்ற காரணத்தால் சிறுத்தொண்டர் என்று போற்றப்படும் நாயனார் பெயரால் திருச்செந்தூர் அருகேயுள்ள ஏரல் சமீபம் சிறுத்தொண்டநல்லூர் என்ற பெயரமைந்த ஊர் உள்ளது. பரமக்குடி அருகேயுள்ள சோமாசி சோமாசிமாற நாயினாரையும், பூந்தமல்லிக்கு அருகேயுள்ள திருமழிசை திருமழிசையாழ்வாரையும், இளையான்குடி இளையான்குடி நாயனாரையும் நினைவூட்டுடவதாக உள்ளன.

இங்ஙனமாக ஊர்ப் பெயர்கள் பக்தி இயக்கத்தையும் அதன் தாக்கத்தையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் பிறந்த ஊர்கள், அவர்களால் பாடல்பெற்ற, மங்களாசாசனம் செய்யப்பட்ட தலங்கள், அவர்களது பாடல் வரிகளை அடிப்படையாகக் கொண்டு பெயர் பெற்ற ஊர்கள், அவர்களது வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு பெயருடைய ஊர்கள் எனப் பல்வேறு விதங்களில் ஊர்ப் பெயர்கள் பக்தி இயக்கத்தோடு தொடர்புடையதாக இன்றும் விளங்குகின்றன. நாளும் இன்னிசையால் இறையுணர்வைத் தட்டி எழுப்பிய இயக்க நாயகர்கள் கோயிலை நடுநாயகமாகக் கொண்டு ஏற்படுத்திச் சென்ற சமுதாய அமைப்பினில் சமயம், இறைவன், சமய அருளாளர்கள் தொடர்புடைத்ததாக ஊர்ப் பெயர்கள் அமையலாயின.



# கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்

திரு. பி. சுந்தரராமன் - பழமார்னேரி.

"க்ருஷ்ணோ ரக்ஷது மாம் சராசரகுரு:
க்ருஷ்ணம் நமஸ்யே ஸதா
க்ருஷ்ணேனைவ ஸுரக்ஷிதோ S
ஹமஸக்ருத்
க்ருஷ்ணாய தத்தம் மன:
க்ருஷ்ணாதேவ ஸமுத்பவோ
மம விபபோ:
க்ருஷ்ணஸ்ய தாஸோஸ்ம்யஹம்
க்ருஷ்ணே பக்தி: அசஞ்சலாஸ்து
பகவன்
ஹே க்ருஷ்ண துப்யம் நம: ||

"லோக குருவான ஸ்ரீகிருஷ்ணன என்னை ரக்ஷிக்கட்டும். க்ருஷ்ணனை நான் எப்போதும் நமஸ்கரிக்கிறேன். கிருஷ்ணனாலேயே நான் பலமுறை ரக்ஷிக்கப்பட்டேன். கிருஷ்ணனின் பொருட்டே என்மனதைப் பறி கொடுத்து விட்டேன. கிருஷ்ணனிடத்திலிருந்தே நான் தோன றினேன். நான கிருஷ்ணனின் தாஸனாக இருக்கிறேன். கிருஷ்ணனிடத்தில அசையாத பக்தி எனக்கு இருக்கட்டும. பகவானே! ஹே கிருஷ்ண! தங்களின் பொருட்டு நமஸ்கரிக்கிறேன்."



பிரம்மம் என்பது ஒரு மிகப் பெரிய ஸமுத்ரம். கடலில் நீர் மூழ்கிக்கப்பல் மூழ்கி வெளிகிளம்புவது போல பிரம்மமாகிய ஸமுத்திரத்தில பகவான் மூழ்கி ஒரு இடத்தில் இராமனாகவும் மற்றொரு இடத்தில் கிருஷ்ணனாகவும் இவ்விதம் பல ஸகுண வடிவங்களை எடுக்கிறார். நிர்க்குணத்தை மட்டும் உபாஸனை செய்பவர்கள் ஒரு ராகத்தில் உள்ள 'நி' என்ற நிஷாதத்தை மட்டும் பிடிப்பவரகள் போன்றவர ஆவர். ஆனால் ஸகுண உபாஸகர்கள் ஸரிகமப தநி என்ற ஸப்த ஸ்வரங்களையும் பூரணமாகப் பிடித்த ராகத்தின் சாயலை முழுமையாக அறிந்தவர்கள ஆவர். கபீர் தாஸர் ஸகுண பிரம்மத்தைத் தாய எனறும் நிர்ககுணத்தைத் தந்தை என்றும் கூறுவார. ராம கிருஷ்ண பரமஹம்ஸர் ஒரு தராசின இரு தட்டுகளாக ஸகுண நிரககுண பிரம்மங்களைக குறிப பிடுவார்.

பத்மபுராணம,

"யதாத்ரிப்ரபவா நத்ய:
பர்ஜன்யாபூரிதா ப்ரபோ
விசந்தி ஸர்வத: ஸிந்தும்
அத்வானஸத்வாம் ததாகிலா:

என்று கூறுவதன் மூலம் நதிகள் பல இருந்த போதிலும் ஒரே கடலை சென்றடைவது போல பல ஸகுண வடிவங்கள் உணரத்துவது ஒரே பிரம்மத்தை என்ற கருத்தைப் பெற வைக்கிறது.

நிர்குண உபாஸகர்கள் எல்லோருமே கிருஷ்ணனிடம் ஈடு பட்டிருக்கிறார்கள். ஆதிசங்கரர் ஷட்பதீ ஸ்தோத்திரத்தில் திருமாலையே 'பரமேச்வர' என்று அழைக்கிறார்.

"மத்ஸ்யாதிபி: அவதாரை:
அவதாரவதா வதா கிலாம் வஸுதாம்
பரமேச்வர பரிபால்யோ பவதா
பவதாபபீதோ ஹம்"

'ஸம்ஸார தாபத்தினால் பீதி அடைந்துள்ள நான் பரமேச்வரனான தங்களால் மத்ஸ்யாவதாரம் முதலிய எடுத்தத் தங்களால் பரிபாலிக்கப்பட வேண்டியவன் ஆகிறேன்' என்கிறார். விஷ்ணு பக்தி மிக மிகுந்தபோனதால் நாராயணனையே பரமேச்வர என்றழைக்கும் பக்குவம் பெற்றார் சங்கரர் என்றால் மிகை யாகாது.

பரம அத்வைதியான ஸதா சிவபிரம்மேந்திரர் 'ப்ரம்மணி மானஸ ஸஞ்சரரே' (ஏ மனமே நிர்க்குண பிரம்மத்திலேயே நீ ஸஞ்சாரம் செய்) என்றுகூறி விட்டு உடனே 'மதசிகிபிஞ்ச அலங்க்ருத சிகுரே' என்று மயில் இறகைத் தலையில் சூடிக் கொண்டுள்ள கிருஷ்ணபரமாத்மாவிடம் ஈடுபடத்தொடங்கிவிடுகிறார்.

500 ஆண்டுகட்கு முன்பு மதுசூதன ஸரஸ்வதி என்ற மஹான் வங்காளத்தில் தோன்றினார். அத்வைத ஸித்தி, பக்திரஸாயனம் போன்ற பல கிரந்தங்களை எழுதியவர். கிருஷ்ண பக்தியில் இவர் ஒரு தீவிரவாதி. இவர் சிவ மஹிமன ஸ்தோத்ரத்திற்கு ஒரு பாஷ்ய உரை எழுதினார். இது முழுவதும் சிவனை மட்டுமின்றி கிருஷ்ணனையும் ஸ்தோத்ரம் செய்வதாக அமையும். பரம அத்வைதியாக, நிர்க்குண பரமானுபவத்தை நிலை நாட்டிய இவரே, குழந்தைக் கண்ணன் விழித்தெழுந்த செய்கையில், கொட்டாவி விட்டதில் சோம்பல் முறித்ததில ஆகிய பல செய்கைகளில் பெரியாழ்வாரைப் போலவே மனதைப் பறிகொடுத்துள்ளார். "த்யானப்யாஸ" என்று தொடங்கும் சுலோகத்திற்கு மதுசூதன ஸ்ரஸ்வதி கீழ்க்கண்டவாறு உரை எழுதுகிறார். "யோகிகள் மனதை அடக்கி நிர்க்குணமாக, நிஷ்க்ரியமாக (கார்யமற்றதாக) உள்ள ஏதோ ஒரு ஜோதியைப் பார்க்கிறார்கள் என்றால் அவர்கள் நன்றாகப்பாரத்துவிட்டுப் போகட்டும். நம்மால் அப்படிக் காணமுடியவில்லையே என்று அழவேண்டாம். அந்த ஜோதி நமக்கு வேண்டாம். ஆனால் அதே ஜோதி நீல ஒளியாக. மயில் இறகைச் சூடி யமுனாநதிக்கரையில் ஓடிவிளையாடுகிறது அல்லவா? அதையே நாம் பார்த்து மகிழ்வோம்" என்கிறார்.

சூரியனுடைய கிரணத்தில் VIBGYOR என்ற ஏழு வண்ணம் இருப்பதாக சொல்கிறோம். இந்த ஏழையும் ஒன்றாகச் சேரத்து விட்டால் ஒரு வண்ணம் இன்றி வெள்ளையாகப் போய்விடும். ஒரு வண்ணமுமில்லாத சூரிய ஒளி முப்பட்டைக் கண்ணாடி (Prism) மூலம் செலுத்தப்பட்டு அதன் மூலம் Refraction ஏற்பட்டு ஏழு வண்ணங்களாகப் பிரிவது போல நிர்குண வஸ்துவானது மாயையில் பட்டு ஸகுண உருவமெடுத்து இத்தனை குணங்களாகிறது.

'தாமம்' என்றால் கயிறு. உதரம் என்றால் வயிறு. கயிற்றால் கட்டப்பட்ட வயிற்றை உடையவர் தாமோதரன். இவன் உலகங்களையெல்லாம் தன்னுள் அடக்கிக்கொண்டு இருப்பதாலும் தாமோதரன் ஆனான். யசோதை எத்தனை கயிற்றாலும் கட்டமுடியாத தன் வயிற்றைப் பிறகு பகவானே கட்டுக்கு அகப்படுத்திக்கொண்டது போல் ஒரு வேஷம் போட்டான் அப்படியே பிரம்மமும் ஸகுணம் மாதிரிக் கட்டுப்பட்டு ராமனாகவும் கிருஷ்ணனாகவும் பலவேஷங்களைப் போடுகிறது.

எனவே நிர்க்குணபிரம்மமே கண்ணனாக ஸகுண வடிவெடுத்தது. சடங்கும் படிப்பறிவும் காட்டாத கண்ணன் உருவை நாம ஸங்கீர்த்தனமே அளிக்கும் என்று உறுதி பூண்டாள் பக்தஜனா. நாதத்தின் உயிராகி நிற்கும் நாரணன் தன் உயிரின் நாதமாகித் தன்னை அழைக்கும் குரலே குழலோசை என்று அறிந்தாள் ராதை. உலகமெல்லாம் குழல், இசையின் குழல் ஒன்றே நிழல் எனத்திட்டமிட்டாள் கோதை என்னும் அன்

னவயற்புதுவை ஆண்டாள். கண்ணன் எனும் கருந் தெய் வத்தின் காட்சிப் பழகி நட்ட மிட்டாள் நந்தலாலாவை வட டமிட்டாள் மீரா. இவர்கள் அனைவருமே ஸகுண உபாஸ னையால் சுலபமாக நிரக்கு ணத்தை அடைந்தவர்கள் ஆவர்.

ஸ்ரீராமாயணம் சிறைஇருந்த செல்வியின் ஏற்றத்தைச் சொல் கிறது. அதாவது "தேவர் சிறை மீட்க எவள் சிறையி ருந்தாளோ அந்தக் கற்புக்கரசி யின் ஏற்றத்தை ராமாயணம் சொல்கிறது" என்று ஸ்ரீவசன் பூஷணம் என்ற நூல் கூறு கிறது. "ஸீதாயா சரிதம் மஹத்" என்று வால்மீகி யும் கூறுவார். ராமாயணம் என்ற பெயருக்குப் பொருள் ராம கதை என்று கொடுப்பதைவிட 'ரமாயா: அயனம்' அதாவது மஹாலக்ஷ்மியின் கதை அல் லது பிராட்டியின் கதை என்று பொருள்கொள்வதே பொருந் தும். ஆனால் கண்ணன் கதையில் கண்ணனே நாய கன் இக்கதையில் மற்ற யாவ ரும் உபபாத்திரங்களாக செயல் படலாமே அன்றி கண்ணன் புகழை விஞ்சிய நபர் கண்ணன் கதையில் இல்லை.

யஜுர்வேத் ஸம்ஹிதை யின் ஐந்தாவது அத்தியாயத் தில் ஸ்ரீகிருஷ்ணனைப் பற்றி சொல்லி உள்ள விருத்தாந்தம் மிகவும் பிராசீனமானது. அதற் குப் பிந்தியது ரிக்வேத ஸம்ஹி தையின் பத்தாவது மண்டலம் 95-வது ஸூக்தத்தில காணப்ப டும் விருத்தாந்தமாகும். அன்றி யும் ரிக்வேத ஸம்ஹிதை முதல் மண்டலம 115ம் ஸூக்தம் 23-வது ரிக்கிலும், 119-ம் ஸூக் தம 9-வது ரிக்கிலும, கிருஷ் ணன் என்ற பெயர் காணப்படு கிறது. அதர்வ ஸம்ஹிதையில் கிருஷ்ணகேசி என்ற அசுரனை வதைத்த கிருஷ்ணன் கதை உள் ளது. இவர் வசுதேவர் புதல்வ ரான ஸ்ரீகிருஷ்ணனே என்ப தில் ஐயமில்லை.

சாந்தோகய உபநிஷத்தில் ஆங்கீரஸ வமசத்தில் கோரன் என்ற பெயருள்ள ரிஷி தேவகி புத்ரனான கிருஷ்ணனுக்கு ஒரு கதை சொன்னார் என்ற செய்தி காணப்படுகிறது. ரிக்வேத ஸம்ஹிதை 8-வது மண்டலத் திலும், 10-வது மண்டலத்தி லும், 42, 44-வது ஸூக்தங்களி லும் கிருஷ்ணன் என்ற ரிஷி யின் பெயர காணபபடுகிறது. இந்த கிருஷ்ணனும் நம் தேவகி புதல்வனே ஆவார். கிருஷ்ணன் க்ஷத்ரியன் ஆயிற்றே! ஸூக்தங் கட்கு ரிஷியாக ஒரு க்ஷத்ரியன் இருந்திருக்க முடியுமா என்ற கேள்வி எழலாம். ஆனால் த்ரஸதஸ்யு, புரமீடன், ப்ரஜா மீடன், ஸிந்து த்வீபன், ஸுதா ஸன், மாந்தாதா, சிபி, ப்ர தர்னன், கக்ஷீவான் போன்ற அரசர்கள் ஸூக்தங்களின் ரிஷி களே. இவரகளும் க்ஷத்திரியர் களே எனபது குறிப்பிடத்தக் கது. ஸ்ரீகிருஷ்ணனும் இதற்கு விதிவிலககல்ல. அன்றியும் 10-வது மண்டலத்திலே கவஷன் என்ற நான்காம் வருணத்தவர் கூட ஒரு ரிஷியாகக் குறிக்கப் பெறுகிறர்.

சாந்தோக்கிய உபநிஷத்தைக் காட்டிலும் முந்திய காலத்தி னைச் சேர்ந்த கௌஷீதகி பிராம் மணத்தில் முன்பு நாம் சொன்ன கோர ரிஷியின் பெயரும் கிருஷ் ணர் பெயரும் காணபபடுகின் றன.

பாணினீயத்தில் "வாஸுதே வார்ஜுனாப்யாம்வுந்" என்ற சூத்திரத்திறகுப் பொருள் கூறு மிடத்து 'வாஸுதேவனை உபா ஸிப்பவன் அர்ஜுனனை உபா ஸிப்பவன் ஆவான்' என்ற பொருளில் விகுதி விதிக்கப்ப டுகிறது. பாணினிககு முற பட்ட காலம் தொட்டே கிருஷ ணார்ஜுனர்கள் தேவதைகளாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனர்.

பௌத்தர்களின் தருமபீடத்தி லும் கிருஷ்ணர் குறிக்கபபடு கிறர. தொல்காப்பியம், பரி பாடல், சிலப்பதிகாரம், புறநா னூறு போன்ற சங்கப் பாடல் களில் கண்ணன் முல்லைக் கடவுளாக்கூறப்படுகிறர்.

யமன் ஒரு முறை தன் தூதர் கட்கு கீழ்க்கண்டவாறு கட்ட ளையிட்டான:-

"ஜிஹ்வா ந வக்தி பகவத் குண
நாமதேயம்
சேதச்ச ந ஸ்மரதி தச்சரணு்ர.
விந்தம்
க்ருஷ்ணய நோ நமதி யச்சிர ஏகதாபி
தான் ஆனய த்வம் அஸநோக்ருத
விஷ்ணுக்ருத்யான்"

(பாகவதம் 6-3-29)

"தூத கணங்களே! நாவி னால் பகவானுடைய குணஙக ளையும, நாமங்களையும் சொல் லாதவர்கள், மனதில் பக வானின் சரணரவிந்தங்களை நினைக்காதவரகள் ஸ்ரீகிருஷ் ணனை ஒரு பொழுதா வது தலையினால் வணங்

காதவர்கள், விஷ்ணு சம்பந்தமான ஆராதனை இல்லாத இத்தனை அஸத்துக்களையும் இங்கே இழுத்துக்கொண்டு வாருங்கள்' என்று கிருஷ்ண பக்தி மேலிட யமன் கூறியதும் கருதத்தக்கது.

பாரத புதை பொருள் ஆராய்ச்சி இயக்குனர் திரு. எஸ்.ஆர். ராவ் அவர்கள் தலைமையில் ஒரு குழு துவாரகைக்கு அருகில் கடலில அகழ்வாராயச்சியை மேற்கொண்டுள்ளது. பழைய கோட்டை கொத்தளங்களையும் கண்டுபிடிதது்ள்ளது. பழைய கோட்டை சுவர்களில் உப்பு நீர் படிமங்கள் படிந்திருப்பதை வைத்து கடல் கோளுக்கு துவாரகை இலக்கானதை உறுதிப்படுத்தியுள்ளனர். கடலுக்கடியில் கோயில்களையும் கண்டுபிடித்துள்ளனர். ஒரு நகர அமைப்பு இருந்ததாகக் கூறுகின்றனர். அதில் கிடைத்துள்ள மண்பாண்டங்கள், கல்லால் ஆன பொருட்கள இவைகளை வைத்து இன்றைக்கு 3500 ஆண்டுகளுக்கு முன்பு கிருஷ்ணனின் ஆட்சி நிலவியதாகக் கூறுகின்றனர். துவாரகை மிகச்சிறந்த துறை முகமாக இருந்திருகக வேணடும். 'த்வார' என்றால 'வழி' என்று பொருள். பரதகண்டத்தினுள் நுழையும் வழியாக (Gateway) துவாரகை இருந்திருக்கிறது திரு. ராவ் அவர்களது குழு மேலும அதிசயிக்கத்தக்க இதிகாச உணமைகளை வெளிப்படுத்தி வருகிறது.

'ஹரிஸ்ம்ருதி: ஸர்வ விபத்விமோக்ஷணம்'.



## ஸம்ஸ்கிருதத்தில் நைவேத்தியப் பெயர்கள்

| | | |
|---|---|---|
| நாளிகேர கண்டத்வயம் | : | உடைத்த தேங்காய் |
| கதளீ பலம் | : | வாழைப்பழம் |
| ஜம்பு பலம் | : | நாகப்பழம் |
| மாதுலங்க பலம் | : | மாம்பழம் |
| ஜம்பூத பலம் | : | கொய்யாப் பழம் |
| பீஜபூர பலம் | : | நாரத்தம் பழம் |
| நாரங்க பலம் | : | பெரப்பம் பழம் |
| வேத்ர பலம் | : | எலந்தாப் பழம் |
| பதரீ பலம் | : | பேரீச்சம் பழம் |
| கர்ஜூர பலம் | : | விளாம்பழம் |
| கபித்த பலம் | : | திராட்சைப்பழம் |
| த்ராக்ஷாபலம் | : | பலாப்பழம் |
| பனச பலம் | : | எலுமிச்சம் பழம் |
| ஜம்பீர பலம் | : | வெள்ளரிக்காய் |
| உர்வாருகம் | : | கரும்பு |
| இக்ஷுகண்டம் | : | அவல் |
| ப்ருதுகம் | : | கடலை |
| சணகம் | : | கற்கண்டு |
| ரஸகண்டம் | : | சர்க்கரை |
| ஸர்க்காரா | : | பசும்பால் |
| கோக்ஷுரம் | : | தயிர் |
| ததி | : | நெய் |
| ஆஜ்யோபகாரம் | : | வெல்லம் |
| குளோபஹாரம் | : | சர்க்கரையன்னம் |
| ஸரக்கரான்னம் | : | சம்பா அன்னம் |
| ஸாலீயன்னம் | : | புளியோதரை |
| துலான்னம் | : | எள்ளு அன்னம் |
| சித்ரான்னம் | : | பலவகை கலவைஅன்னம் |
| லட்டுகம் | : | இட்லி |
| மோதகம் | : | கொழுக்கட்டை |
| மாஷாபூபம் | : | வடை |
| குளாபூபம் | : | அதிரஸம் |
| க்ருதகுளபாயஸம் | : | பாயஸம் |
| அம்ருதம் | : | தீர்த்தம் |

திரு. கி. மகாலிங்கம் - அறையணிநல்லூர்.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில்

இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் நம் துணைவியாருடன் திருமலைக்கு 31-8-91 அன்று திருமலைக் கோவிலுக்கு வருகை புரிந்தார். திருமலையில் ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த், தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. சுப்புராமரெட்டி, செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி. எஸ். பிரஸாத் ஆகியோரால் எதிர்கொண்டழைக்கப்பட்டார். அடுத்த நாள் வெள்ளிக்கிழமை தோமால சேவை நிகழ்ச்சியிலும் குடியரசுத் தலைவர் அவர்கள் பங்கேற்றூர். இது போது ஆந்திர மாநில சிறு தொழில் அமைச்சர் திரு. ஆர். செங்காரெட்டி மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி. பத்மநாபம் அவர்களும் உடன் இருந்தனர்.

* * * *

## நல்லாசிரியர் விருது

ஆந்திர மாநில அளவில் ஹைதராபாத்தில் அரசு சார்பில் தி.தி. தேவஸ்தான மேலாண்மையின் கீழ் திருப்பதியில் செயற்படும் பல்வேறு கல்லூரிகளில் பணிபுரியும் கீழ் வரும் ஆசிரியர்களுக்கு 1990-91 ஆம் ஆணடுக்கான நல்லாசிரியர் விருதுகள் 5-9-91 அன்று வழங்கப்பட்டன. திரு. கே. அப்பாசாமி பிள்ளை, திரு. வீரம ரெட்டி, திரு. எஸ்.என். நாக்ஜி, திருமதி. டாக்டர் சி. நிர்மலா, குமாரி. பி. ஸ்வர்ணும்பா, திருமதி. பி.கே. ஜெயலட்சுமி.

* * * *

## கோகுலாஷ்டமி

திருமலைக் கோயிலில் 2-9-91 அன்று கோகுலாஷ்டமி விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது அன்று ஸர்வபூபால வாகனத்தில் ஸ்ரீகிருஷ்ணர் ஸர்வாலங்கார பூஷிதராய் எழுந்தருளி திருவீதி வலம் புரிந்து பக்தர்களுக்குத் திருக்காட்சி வழங்கினார். அன்று ஆஸ்தானத்தில் பாகவதத்தின் 10-ஆவது ஸ்கந்தம் வாசிக்கப்பட்டது.

அன்று காலை திருப்பதியில் தி.தி. தேவஸ்தான எஸ்.வி. மாட்டுப்பண்ணையில் கோகுலாஷ்டமி நிகழ்ச்சி வழக்கம் போல் பக்திப் பரவசத்துடன் நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி. எல். பிரஸாத், இணை செயலாட்சித் தலைவர் திரு. டி. ஜனார்த்தன நாயுடு, மக்கள் தொடர்பு அலுவலர் ஆகியோரும் பங்கேற்றனர். இறுதியில் திருமதி. விசாலாட்சி அவர்களின 'கிருஷ்ண பக்தி' பாடல் நிகழ்ச்சி நடைபெற்றது.

* * * *

## பிரம்மோத்ஸவம்

திருமலையில் இவ்வாண்டு வருடாந்திர ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரம்மோத்ஸவம் 12-9-91 முதல் 20-9-91 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இவ்வொன்பது நாட்களின் போது காலையிலும், மாலையிலும் பல்வேறு வாகனங்களில் குறிப்பாக கருடனின் மீதும் திருத்தேரிலும் உத்ஸவர் தன் துணைப் பெண் தெய்வங்களுடன் எழுந்தருளி, திருவீதி வுலா மேற்கொண்டது கருத்திற்கும், கண்களுக்கும் பெருவிருந்தாக அமைந்தது. கருட சேவையினை சுமார் 65,000 யாத்திரிகப் பொதுமக்கள் கண்டு களித்தனர்.

இப் பிரம்மோத்ஸவத்தின் போது திருமலைக்கு சுமார 4 இலட்சம் யாத்திரிகர்கள் வருகை புரிந்தனர். இப்பிரமோத்ஸவத்தின் போது திருமலைக் கோயில் வருமானம் ரூ. 1,40,84141/- ஆகும். கருட சேவை அன்று ஆந்திர மாநில முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி அவரகள் தன் குடும்பத்துடன் திருமலைக்கு வருகை புரிந்து, ஆண்டாண்டு வழங்கப்படுவதைப் போன்றே, இவ்வாண்டும ஆந்திரமாநில அரசு சார்பில் பட்டுப் பீதாம்பர வஸ்த்திரங்களை உத்ஸவருக்கு முதல்வர் அவரகள் வழங்கினார். இவ்வாண்டு கருடசேவை மற்றும் திருத்தேர் பவனி நிகழ்ச்சிகள் நேரடியாக வானொலி மூலம் ஒலி பரப்பப்பட்டது. குறிப்பிடத்தகுந்த செய்தியாகும்.

இப்பிரமமோத்ஸவ நாட்களின் போது மாலை நேரங்களில் தி.தி. தேவஸ்தான

## சந்தாதாரர்களுக்கு...

30-11-91-ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும், விவரங்களுக்கும் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

34, 48,67, 117, 119, 121, 123, 124, 125, 422, 423, 425, 430, 431, 437, 458, 482, 844, 847, 869, 870, 1961, 2093, 2129, 2130, 2140, 2144, 2189, 2193, 2202, 2204, 2220, 2222, 2236, 2237. 3242, 3587, 3588, 3595, 3598, 3604, 3604, 3607, 3608 3613, 3618, 3628, 3642, 4473, 4784, 4785, 4792, 4796 முதல் 4798, 4800, 4803, 4805, 4815, 4818, 4819, 4820, 4824, 4827, 4828, 4839, 4843, 4845, 4847, 4848, 4853, 4855, 4856, 4857, 4863, 4867 4872, 4874, 4880, 4883, 4887, 4891, 4897, 4902, 4905, 4910, 4911, 4922, 4929, 4944, 4947, 6346, 6411, 6436, 6440, 6445, 6447, 6453, 6456, 6474, 6496, 6497, 6498, 6500 முதல் 6502, 6504, 8798

தர்ம பிரசார பரிஷத் ஆதரவில் திருமலையில் திருவாளர்கள் திரு. எம்.எஸ். கோபாலகிருஷ்ணன் பி.வி. ராமன், பி.வி. லட்சுமணன் சகோதரர்கள், சுவாமி ஹரிதாஸகிரி, ஸ்ரீ யு. ஸ்ரீநிவாஸ், நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி, வேம்பட்டி சின்ன சத்யம், சிக்கில் சகோதரிகளான திருமதி. வி. குஞ்சுமணி மற்றும் வி. நிலா, திருமதி. ரேவதி, மற்றும் பலருடைய இன்னிசை மற்றும் இன்னிசைக் கருவிகளின் கர்நாடகக் கச்சேரிகளும், கலை நிகழ்ச்சிகளும் ஹரிகதை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

* * * *

### திருப்பதியில்

அண்மையில் திருப்பதியில் தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா ஆயுர்வேதக் கல்லூரியினை ஆந்திர முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி அவர்கள் திறந்து வைத்தார். பின்னர் அரசு மகளிர்ப் பல்கலைக்கழக வளாகத்தில் அறிவியல் கூடம் ஒன்றினையும் திறந்து வைத்தார்.

* * * *

### மற்றைய செய்திகள்

திருப்பதி அடுத்த திருச்சானூரில் உள்ள ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் தாயார்க்கு (மூலவர்க்கு) ரூ. 1 கோடி செலவில் வைர முடி ஒன்று செய்யப்படும்

* * * *

அடுத்த ஆண்டு ஜனவரி மாதத்தில் திருமலையில் பல்வேறு மடங்களைச் சார்ந்த சமயத்தலைவர்களும், முக்கிய கோயில்களின் செயலாட்சித் தலைவர்களும் அடங்கிய 500 நபர்கள் பங்கேற்கும் வகையில் வேத மாநாடு ஒன்று நடைபெற உள்ளது. இது போன்ற மாநாடு திருமலையில் 1965-ஆம் ஆண்டு நடைபெற்றது.

* * * *

தி. தி. தேவஸ்தான மேலாண்மை, தி.தி. தேவஸ்தான ஊழியர்கள் கூட்டுறவு வங்கிக்கு ரூ. 20 இலட்சம் கடன் அளித்துள்ளது.

* * * *

தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. டி. சுப்புராமரெட்டி அவர்கள் தி.தி. தேவஸ்தான ஊழியர்கள் நல நிதிக்கென நன்கொடையாக ரூ. 1 இலட்சத்திற்கான காசோலையினை வழங்கினார்.

* * * *

பொதுமக்களின் ஏகோபித்த முடிவினை ஒட்டி புதுதில்லியில் திருமலைக் கோயில் லட்டு பிரஸாதங்களை விற்பதாக இருந்த முயற்சி கைவிடப்பட்டுள்ளது.

* * * *

திருமலைக் கோயிலுக்கென தங்கத்தேர் ஒன்று இன்னும் நான்கு மாதங்களில் செய்து முடிக்கப்படும். தேர் பூர்த்தியானதும் இதற்கென தனி சமய விழா ஒன்று மேறகொள்ளப்படும்.

திருமலை அடிவாரமான அலி பிரியில் விரைவில் தி.தி. தேவஸ்தானம் அளித்துள்ள 5 ஏக்கர் காலிமனையில் ஆந்திர மாநில அரசு போக்குவரத்துத் துறையின் மூன்றுவது பேருந்து பணிமனை ஒன்று கட்டப்படும். தற்போது திருமலைக்குச் செல்லும்படியான இணைப்பு பேருந்து போக்குவரத்து ஒன்று அலிபிரியில் செயற்பட்டுவருகின்றது. இங்கிருந்தும் யாத்திரிகர்கள் திருமலைக்கு அரசு பேருந்தில் செல்லலாம். வேலூர், சித்தூர், பெங்களூர் மற்றும் மதனபல்லி ஆகிய இடங்களிலிருந்து வரும் யாத்திரிகர்கள் பயனுறும் வகையில் செயற்படும். இப்பேருந்து நிலையம் ஸ்ரீபாலாஜி இணைப்பு பேருந்து நிலையம் என்று அழைக்கப்படும்.

* * * *

திருமலை திருப்பதி தேவஸ்தான ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல் திட்டத்தின் சார்பில் முதன் முதலாக திருமலை முதல் ப்ரம்மோத்ஸவத்தின் போது முதல் ஐந்து நாட்களில் (செப்டம்பர் 11-15, 91) ஸ்ரீமான்கள் டாக்டர் எம். நரசிம்மாசாரியார் (சென்னை) 'கைங்கர்யம்' என்ற பொருள் பற்றியும், Dr. M.A. வேங்கடக்ருஷ்ணன் (சென்னை) 'வேங்கடம்' என்ற பொருள் பற்றியும், E.S. வரதார்ய ஸ்வாமி (பரகால மடம், மைசூர்) 'முந்நீர் ஞாலம்' பற்றியும், துணைவேந்தர் N.S. ராமாநுஜதாசார்யா ஸ்வாமி (திருப்பதி) 'அருளிச் செயலும் எம்பெருமானாரும்' என்ற பொருள் பற்றியும் சேதலூரி கோபாலக்ருஷ்ணமாச்சார்ய ஸ்வாமி (சிம்மாசலம்) 'ஊனேறு செல்வம்' பற்றியும் உபன்யாசித்தனர்.

* * * *

செப்டம்பர் 21-ம் தேதி முதல் அக்டோபர் 1 வரை ஸ்ரீஉ.வே. PTGVL. நரசிம்மாசார்யுலு ஸ்வாமி (மசூலிப்பட்டணம்) பகவத் விஷயம் உபன்யாஸங்கள் திருப்பதி அன்னமாச்சாரிய கலாமந்திரத்தில் நடத்தினார். நிகழ்ச்சிகளை ஸ்ரீமான் M.V.S. பிரஸாத், I.A.S., (Executive Officer, TTD) அவர்கள் செப்டம்பர் 21ம் தேதி தொடக்கி வைத்தார். ஸ்ரீமான் Y.S.N. சர்மா, I.P.S., (Chief Security Officer, TTD.) அக்டோபர், 1ம் தேதியன்று ஸ்வாமிக்கு சம்பாவனை அளித்து பாராட்டிப் பேசினார்.



(3 -ஆம் பக்கத்தொடர்ச்சி)

பொருளாதாரப் பிரச்னைகளும், பெண்மையில் கலந்திட்ட ஆண்மை உணர்வுகளும், நாட்டுப் பற்றின்மையுமே வன்முறைகள் நிறைந்திட்ட இன்றைய சமுதாய சரிவுக்குக் காரணங்களாகும். இதுபோன்ற பிரச்னைகளுக்கும், குறைபாடுகளுக்கும் பலிஆடுகளாவது பெண்ணினம் என்பது ஓர் உலக நியதியாக அமைந்தாலும், இதனை இம்மண் அனுமதித்ததா என்பதை சற்றே எண்ணிப் பார்க்க வேண்டும். இல்லையெனின் ஆண் கடவுளருடன் சரிநிகராக பெண் தெய்வ வழிபாட்டினை அமைத்திருக்க மாட்டார்கள் நமது ஆன்றோர்கள்.

'நவராத்திரி' விழாவும் இந்நோக்கத்தில் தான், ஏற்படுத்தப்பட்டுப் பல ஆண்டுகளாக கொண்டாடப்படுகின்றது. நம்மிடம் உள்ள தீய எண்ணங்கள் பொசுக்கப்பட வேண்டும், நல்லெண்ணங்கள் வளர்க்கப்பட வேண்டும், ஞான ஒளி வீசிடவேண்டும் என்று மலைகளுக்கும், திருமகளுக்கும், கலைமகளுக்கும் விழா ஏற்படுத்தி, நம்மை உயர்த்திக் கொள்ளவும் உயர்வான சமுதாயத்தை உருவாக்கவும் வழிகோலப்பட்டது. உலகத்தை இயக்கிடும் இச்சக்திகளுக்கு முக்கியத்துவம் தரும் வகையில் சக்தியை நெறிப்படுத்தும் அஃறிணைக் கருவிகளுக்கும் 'ஆயுதபூசை' என்று விழா ஏற்படுத்தி நம் நன்றிக்கடனைச் செலுத்தவும் அறிவுறுத்தப் பட்டது. துர்க்கா பூஜை, சாமுண்டேஸ்வரி வழிபாடு, தஸரா பெருவிழா, ராம் லீலா விழா என்று பல்வேறு பெயர்களில் இந்நவராத்திரி விழா நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஒரே சமயத்தில் கொண்டாடப்படுவதை மனதிற் கொண்டு, பெண்மையின் மேன்மையினையும், அப்பெண்மைக்குத் தரவேண்டிய மதிப்பையும் நாம் உணர்ந்து செயல்பட்டால் தான், இதுபோன்ற விழாக்களை இம்மண்ணில் கொண்டாடுவதற்குப் பொருள் இருக்கும்.

Edited and Published on behalf of the T T. Devasthanams by K. Subba Rao, M.A., and printed at T.T.D. Press by M Vijayakumar Reddy, Manager, T.T.D Press, Tirupati-517 507.

